உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 36 | பிங்கள – சித்திரை – 10—5—77 | இதழ் 6

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. – சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## குருபூஜை

### முன்னறிதெய்வம் :

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பது, முதல் வகுப்பிலேயே கற்றுத் தரப்பட்ட பாடமாகும். ஐந்து அல்லது ஆறு வயதில் தனது பசியை நீக்கி அன்பு காட்டும் தாய் தந்தையரையே குழந்தை தெய்வமாகக் கருதமுடியும். ஆனல் அறிவும், வளர்ச்சியும் மிகமிக இவர்கள் வாயிலாகவே வேறு உயர்ந்த தெய்வங்களும் உண்டு என்பதனை அறிகின்றது குழந்தை. அதனல் தான் மேற்கூறிய ஔவையாரின் அமுத வாக்கில் பெற்றோர்களை முன்னறி தெய்வம் என்று நுட்பமாகக் குறிக்கப்பெற்றது. இவர்கள் முன்னறி தெய்வங்கள் எனவே, பின்னே அறியத்தக்க வேறு தெய்வங்களும் உண்டு என்பதனையும் அறிய முடிகிறது.

'மாதா, பிதா, குரு, தெய்வம்' என்பது அடுத்துவரும் பழமொழி. மாதா அறிவிக்கப் பிதாவையும், பிதாவால் குருவினையும், குருவருளால் தெய்வத்தையும் சென்று சேர முடியுமென்பதனை இப்பழமொழி விளக்குகின்றது. இத்தொடரில் மூன்றாவதாகக் காணப்பெறும் குருவினை அறிதலும் அடைதலும் பற்றி நமது அற நூல்களும் – சாத்திர – தோத்திரங்களும் பலவாறாக விரித்துரைக்கின்றன.

ஞானகுரு :

குரு என்ற சொல் பொதுவாகக் கல்வி கற்பிக்கும் ஆசிரியனைக் குறிப்பிட்டாலும் குரு இருவகையினராகக் கூறப்படுகின்றார். ஒருவர் வித்யா குரு, மற்றொருவர் ஞானகுரு. இவ்விருவரும் மக்களுக்கு ஞானத்தை வழங்கினாலும் வித்யாகுரு கலைஞானத்தை – உலகியல் ஞானத்தை உணர்த்துபவராக விளங்குகிறார். ஞானகுரு மெய்ஞ்ஞானத்தை – நிலைமாறுபாடில்லாத ஞானத்தை – வீடுபேறளிக்கும் சிவஞானத்தை உபதேசிக்கின்றார். இதனைச் சேக்கிழார், திருஞானசம்பந்தர் ஞானப்பால் அருந்திய நிகழ்ச்சியை வைத்துக் கூறுவதால் நன்கு அறியலாம். உவமையிலாக் கலைஞானம் என்று உலகியல் கலையறிவையும் (ஞானத்தையும்) உணர்வரிய மெய்ஞ்ஞானம் என்று சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானத்தையும் குறிப்பிடுகின்றார். இதனால், நம் அஞ்ஞானம் நீக்கி மெய்ஞ்ஞானம் கைவரச்செய்து, இறையருளில் நம்மை ஆற்றுப்படுத்தும் ஞானாசிரியனையே குரு என்ற சொல் சிறப்பாகக் குறிப்பதை அறியலாம். சிற்றின்பத்திற்குத் துணையாகும் நல்ல மனைவியும் பேரின்பத்திற்குத் துணையாகும் நல்ல ஞானாசிரியனும் ஒருவனுக்கு வாய்ப்பது, அவனது நல்வினைப் பேற்றினால்தான் என்பதனைத் 'தாரமும், குருவும் தலைவிதி வசத்தால்' என்ற பழஞ்சொற்றொடர் நன்கு விளக்குகின்றது.

சத்தியே குரு :

குரு அஞ்ஞானத்தைப் போக்குபவர். ஒப்புயர்வற்ற பரம்பொருளாகிய பரமேசுவரனின் அருளையே சக்தி என்று கூறுவது நமது சைவ சித்தாந்த சாத்திர மரபு. 'அருளது சக்தியாகும் அரன்றனக்கு' என்பது சிவஞானசித்தியார். இறைவனது திருவருட் சக்தியே குருநாதராக எழுந்தருளிவந்து உயிர்களின் மலம் அகற்றி அவற்றை இறைவன் திருவடியில் சேர்ப்பிக்கின்றது என்பது நமது சமய மரபு. என்றும் உயிர்களை விட்டு

நீங்காத தன்மை படைத்த மும்மலங்களை நீக்கியருளி, திருவடிப் பேறு வழங்கி, எவர்க்கும் எளிதில் கைவராத மெய்ஞ்ஞானத்தில் திளைக்கும் பெருவாழ்வினை வழங்கி, பழவினை தவிர்த்தருளி வாழ்விப்பவர் ஞானகுரு. அன்னையும் பிதாவும் ஆகிய ஆரம்ப குருக்களையும் அடுத்த நிலையில் வித்யாகுரு ஞானகுரு என்ற இந்த இரு குருமார்களையும் கொடுக்கின்றவர் பரமேசுவரனே யாவர். அவர் பிருதிவி முதலாகிய முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பால், உலக உயிர்களைக் கரையேற்றுவதற்கு நாததத்துவத்தில் தங்கி இருக்கிறார். அடுத்த நிலையில் உள்ள விந்து தத்துவத்தில் சத்தியிருக்கிறாள். அந்தச் சத்திதான் குருவாக வருகின்றாள். அத்தகு குருநாதரின் திருவுருவிலே எழுந்தருளி வந்து புவனம்பிகையாகிய அன்னை நீங்காத வீடுபேற்றின் பத்தை நல்கியருளினாள் என்கிறது புவனம்பிகை கலைஞான தீபம் என்னும் அரிய நூல்.

"பேராத மும்மலம் பேர்த்துத் திருவடிப் பேறுநல்கி
வாரா தெவர்க்கும் அரிதாய உண்மையின் வாழ்வருளித்
தீராத வல்வினை தீர்த்த குருவின் திருவுருக்கொண்டு
ஆராத இன்பச் சுகாதீதம் நல்கினள் அம்பிகையே"

என்பது இக்கருத்தமைந்த இனிய திருப்பாடல்.

குருவே சிவம் :

அம்மையே குருவாக எழுந்தருளி வந்து அருள்பாலிக்கிறாள் என்பதனால் அவள் ஐயனின் வேறானவள் அல்லள் என்பது தானேவிளங்கும். இக்கருத்தில்தான்

"குருவே சிவமெனக் கூறினன் நந்தி"

என குருவினையே சிவமாகக் காட்டியருளினார் திருமூலதேவ நாயனார். இறைவனுடைய அளப்பரிய கருணைப் பெருவெள்ளம் குருநாதர் வழியே சிற்றுயிர்களுக்கு வருகின்றது என்பதே நமது சமய நூல்கள் காட்டும் உண்மை. குடியரசுத் தலைவரின் கட்டளைகள் – மாநில ஆளுநர் – மாவட்ட ஆட்சித் தலைவர் – கோட்டாட்சியாளர் எனப் பலதிறப்பட்டவர் வழி நம்மை வந்து அடைதல்போல சிவனருள் குருநாதர் வழியே நம்மை ஆட்கொள்ளுகின்றது. கீழ்நிலை அதிகாரிகளைப் பற்றிநின்று நாம் குடியரசுத் தலைவர் வரை சென்று நலம் பெறுதல்போல, குருநாதர் திருவடி பற்றிநின்றே நாம் இறையருளைப் பெற முடியும்.

மானுடச் சட்டை தாங்கிநின்று - நம்மில் ஒருவராகக் காட்சி தந்திருந்தாலும், நம்மையெல்லாம் ஈடேற்றி இறையருளில் சேர்ப்பிக்கும் குருநாதரைச் சிவமாகவே பாவித்து வணங்கு வதும், வழிபட்டு உய்வதும் நமது கடமையாகும். திருஞான சம்பந்தரைக் குருநாதராகக் கொண்டு மங்கையர்க்கரசியாரும், திலகவதியாரைக் குருவாகக் கொண்டு திருநாவுக்கரசரும் திருநாவுக்கரசரைக் குருவாக வழிபட்டு அப்பூதியடிகளும், சுந்தரமூர்த்தி சுவாமிகளைக் குருவாக ஏற்று, பெருமிழலைக் குறும்பரும் இறையருள் பெற்றமை பெரிய புராணத்தால் விளங்குகின்றன. மனத்தால் நினைந்தும், வாக்கால் அருளியும், கண்ணால் பார்த்தும், கைகளால் தீண்டியும் குருநாதர் அருளும் ஞானதீட்சை முறைகள் பலவாகும். இவற்றை முறையே மானத தீட்சை, வாசிக தீட்சை, நயன தீட்சை, ஸ்பரிச தீட்சை என்றெல் லாம் நமது ஞான நூல்கள் விளக்கும். இத்தகு குருநாதர்கள் இறையருளில் கலந்தபின் அவர்கள் திருமேனியை அடக்கம் செய்து, சிவலிங்கப் பிரதிட்டை செய்து ஆலயம் எழுப்பி அவர்களைச் சிவமாகவே கருதி, அவர்கள் சித்தாந்த பரமுத்தி எய்திய நாட்களில் குருபூஜை விழா எடுத்துச் சிறப்பிப்பது நமது சமயத்தில் மேற்கொள்ளப்பெற்றுவரும் மரபு ஆகும். சிவபூஜை, குருபூஜை, மாகேசுவர பூஜை என்பன நமது சைவ நெறியில் இன்றியமையாத அங்கங்களாகும்.

## குருபூஜைப் பெருவிழா :

நமது தருமையாதீனத்தைத் தோற்றுவித்து எட்டு அனுபூதி நூல்களை அருளிச்செய்து, பக்குவம் உடைய சீடர்கள் பலருக்கு அருளுபதேசம் செய்து, ஞான அரசு ஓச்சி, சைவப்பயிர் வளர்த்த ஆதிபரமாசாரியர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் ஜீவசமாதி கூடிய இடமே தற்பொழுது பரிவார தெய் வங்களோடு கூடிய அருள்மிகு ஞானம்பிகை உடனுகிய ஸ்ரீ ஞான புரீசுவரர் திருக்கோயிலாகத் திகழ்கிறது. இங்கு ஸ்ரீ குருஞான சம்பந்தரது குருபூஜைப் பெருவிழாவையொட்டி, பத்து நாட்கள் பெருவிழா நிகழ்த்தப்பெறும். இவ்வாண்டு குருபூஜைப் பெரு விழா நிகழும் பிங்கள ஆண்டு வைகாசித்திங்கள் 25 ஆம்நாள் (7—6—77) செவ்வாய்க்கிழமையன்று மிகச் சிறப்பாக நடைபெற வுள்ளது. தருமையாதீனத்தில் 26 வதாக ஞானபீடத்தில் அமர்ந் திருந்து, செந்தமிழிற்கும், சிவநெறிக்கும் பெருந் தொண்டாற்றி வரும் **ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள் தமது ஆதீன முதற்குரவரின் குருபூஜை

விழாவை, அருள்மிகு ஞானம்பிகை உடனுறை அருள்மிகு ஞானபுரீசுவர சுவாமி திருக்கோயில் பெருவிழாவாக 29—5—77 முதல் 7—6—77 வரை பத்து நாட்களுக்குச் சிறப்பாகக் கொண்டாட அருள்பாலித்திருக்கிறார்கள். குருபூஜைப் பெருவிழாவன்று இத் திருக்கோயிலில் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பு வழிபாடும், அன்று மாலை ஸ்ரீ குருஞானசம்பந்தரது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதப்பெருமானுக்குச் சிறப்பு வழிபாடும் நிகழ்த்தப்பெறும். 8—6—77 புதன்கிழமையன்று நண்பகலில் மாகேசுவர பூஜை நிகழ்த்தி இரவு பட்டணப் பிரவேசமாக எழுந்தருளி அருட்காட்சி வழங்குவார்கள். 7—6—77 அன்றும் 8—6—77 அன்றும் இரவில் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் கொலுவில் அமர்ந்து கொலுக்காட்சி வழங்கி அடியவர்களும், அன்பர்களும் நிகழ்த்தும் வழிபாட்டை ஏற்றருள்வார்கள். இவ்வாண்டு இந்நாட்களில் திருநெறிய தெய்வத்தமிழ்மாநாடும், சமயப் பயிற்சி வகுப்பும் நடைபெறவுள்ளது. இவ்விழாவில் பொதுவாக அன்பர்களும் சிறப்பாகச் சைவர்களும் வந்து வழிபட்டு சமய நெறிமுறைகளைத் தெரிந்து குருபூஜையின் தத்துவம் உணர்ந்து ஆதீன முதற்குரவர் ஸ்ரீ குருஞானசம்பந்தரின் குருபூஜைப் பெருவிழாவில் பங்கேற்று தரிசித்தும், கேட்டும் திருவருளும் குருவருளும் பெற்று உய்வார்களாக.



## பார்வையாளர் குறிப்பு

### தருமபுர ஆதீனம்

### ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி தேவஸ்தானம், திருவையாறு.

ஐயாறன் அடித்தலம் காணும் பேறு இன்று கிட்டியது. மாதர்ப் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும் அப்பர் பெருமான் கண்ட தலம் இது. 1971 குடமுழுக்கில் கண்டது போல் இன்றும் புதுமைகுலையாமல் இந்த ஆலயம் நிமிர்ந்து நிற்கிறது. ஆலயத் தூய்மையிலும், நிர்வாகத்திலும், தருமையாதீன முத்திரை தெளிவாகத் தெரிகிறது. சிவாச்சாரியர்களும் ஓதுவாமூர்த்தியும் பக்திசிரத்தையுடன் வழிபாடு நடத்திவைக்கின்றனர். தருமைக் குருமணிக்கு எங்கள் வணக்கமும் நன்றியும்.

(ஒ-ம்) ம. அ. முருகேசன்,

1—1—77. Judicial Officer, Corporation, Madurai.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

வழங்கியருளிய

# ஆசியுரை*

26—3—1977

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்.

மாநாட்டுத் தொடக்கம் :

தென்முகக் கடவுளுக்குத் திருக்கோயில் எடுப்பித்தும் குடமுழுக்கு விழாக் கொண்டாட முற்பட்டுள்ள அன்பநாதபுரம் வகையார் அறத்துறைக் கல்லூரியின் செயற்குழுவினர் ஆசிரியர்கள் மாணவர்கள் அன்பர்கள் அனைவரையும் பாராட்டுகிறோம். தென்முகப்பெருமான் திருக்கோயிலின் இருபாலும் அவரது குழந்தைகளாகிய விநாயகர், முருகன் ஆகியோருக்கும் கோயில் எடுத்துக் குடமுழுக்கு விழா நிகழ்த்துவது பொருத்தமுடையதே.

கயிலைக் குருமணி அவர்கள் இக் கலைக் கல்லூரியைத் தொடங்கிவைத்ததையும் அவர்கள் அஸ்த விசேடத்தால் கல்லூரி

---

* மாயூரம்-மன்னன்பந்தல், அன்பநாதபுரம் வகையார் அறத்துறைக்கல்லூரி விளையாட்டரங்கில் எழுந்தருளியுள்ள அருள்மிகு தக்ஷிணமூர்த்தி திருக்கோயில் குடமுழுக்கு விழாவில் மூன்றாவது காலம் யாகசாலை தரிசனத்திற்கு எழுந்தருளியபோது வழங்கியருளியது.

வளர்ச்சி யடைவதையும் இங்குக் குறிப்பிட்டார்கள். கயிலைக் குரு மணி அவர்கள் தொட்டது துலங்கும்; விட்டது விளங்கும் என்பது உலகறிந்த உண்மை. கலைக்கோயிலைத் திறந்துவைத்த கயிலைக் குருமணி அவர்களின் வழித் தோன்றல் என்ற காரணத்தினால் நம்மை இத் திருக்கோயில் குடமுழுக்கு விழாவில் சமய மாநாட்டைத் தொடங்கிவைக்க அழைத்துள்ளார்கள் என்றே கருதுகிறோம்.

மாணவர்கள் பக்தி :

ஆறு மாதங்களுக்கு முன்பு இக்கல்லூரி மாணவர்கள் சமூகப்பணி செய்வதற்குத் தருமபுரம் வந்திருந்தார்கள். மழையினால் அரிக்கப்பெற்றிருந்த ஒரு குளத்தின் கரையைச் செப்பம் செய்தார்கள். மூன்று நாட்கள் பணி செய்து பூர்த்தியானவுடன் நம்மைக் காணத் திருமடத்திற்கு வந்தார்கள். அவர்களிடம் உரையாடும்போது கடவுள் வழிபாட்டின் அவசியத்தை மாணவர்களுக்கு அறிவித்தோம். அப்போது மாணவர்கள் தங்களுக்குள்ள கடவுட்பற்றை எடுத்துக் கூறினர். கல்லூரியின் முகப்பில் ஒரு தக்ஷிணாமூர்த்தி கோயிலிருப்பதையும் மாணவர்கள் பக்தி சிரத்தையோடு அதனை வழிபடுவதையும் குறிப்பிட்டனர். அக்கோயிலின் திருப்பணி ஆசிரியர்கள் நிர்வாகத்தினர் அனுமதியோடு தொடங்கப்பட இருப்பதையும் தெரிவித்தனர். அன்று மாணவர்களது பக்தி மனப்பான்மையைப் பாராட்டி வாழ்த்தி அனுப்பினோம். சில நாட்களுக்குப்பின் கல்லூரி முதல்வர் ஆசிரியர்கள் நிர்வாகத்தினருடன் சிலர் தருமைக்கு வந்து நம்மைக் கண்டு திருக்கோயில் திருப்பணி முற்றுப்பெற்று மகா கும்பாபிஷேகம் நிகழவுள்ளதைத் தெரிவித்தனர்.

இக்கோயிலை அழகிய முறையில் அமைத்திருப்பதுபற்றி மகிழ்ச்சி அடைகிறோம். மாணவர்கள் கல்வி நிலையத்துக்குச் செல்லும் போதும் திரும்பும்போதும் வழிபடுமளவில் இருப்பது மிகவும் பொருத்தமாகவே உள்ளது. மாணவர்கள் கடவுள் உணர்வோடுசென்று கல்விபயில இக்கோயில்கள் நன்கு உதவும்.

இங்கு, கல்லூரி கட்டுவதற்கு முன்னரேயே தக்ஷிணாமூர்த்தி கோயில் அமைந்திருப்பது நல்ல அறிகுறி. இங்குள்ள மூன்று கோயில்களும் மூன்று நிலைகளை நமக்கு உணர்த்துவன. விநாயகர் கோயில் தொடக்கப்பள்ளி போன்றது. முருகன் கோயில் உயர்நிலைப்பள்ளிபோன்றது. தக்ஷிணாமூர்த்தி கோயில் பல்கலைக் கழகம் போன்றது. தொடக்கப் பள்ளியில் ஆசிரியர் பாடங்களை

மூன்று முறை கூறிக் கற்பிப்பர். உயர்நிலைப்பள்ளியில் ஒரு முறை இருமுறை கூறுவர். கல்லூரியில் பேராசிரியர்கள் விரிவுரையாகக் கூறுவதை மாணவர்கள் கேட்டுப் பயனடைய வேண்டும். விநாயகர் முருகன் தக்ஷிணாமூர்த்தி மூவருமே ஆசிரியர் ஆவர். இம்மூன்று கோயில்களும் இக்கல்லூரியி லிருத்தல் மிக்கபொருத்தமுடையதே.

விநாயகர் தத்துவம் :

விநாயகரது திருவுருவம் உண்மைத் தத்துவங்கள் பல வற்றை நமக்கு உரைத்தருளுவது. அவரது வடிவம் ஓங்காரம், பெருவயிறு எல்லா உலகங்களையும் உயிர்களையும் தனக்குள் அடக்கியிருக்கும் நிலையைத் தெரிவிப்பது. ஐந்து கரங்களில் பாசம் ஏந்திய கை படைத்தல் தொழிலையும், அங்குசம் ஏந்திய கை அழித்தல் தொழிலையும், அபயமளிக்கும் கை காத்தல் தொழிலையும், வரதமளிக்கும் கை அருளலையும், துதிக்கை, மறைத் தலையும் உணர்த்தி ஐந்தொழிலைச் செய்பவர் அவரே என்பதைத் தெரிவிக்கின்றன. இரண்டு தந்தங்களில், ஒடிந்த கொம்பு அபர ஞானத்தையும், முழுமையான கொம்பு பரஞானத்தையும் உணர்த் தும். தாழ்செவி - எல்லாமறிபவர் என்பதையும், முக்கண் - முத் தொழிலையும் குறிக்கும் என்பர்.

1008 அண்டங்களையும் 108 யுகம் ஆண்ட கஜமுகாசுரன் இறைவனை வேண்டி வரம்பல பெற்றான். அவனை விநாயகப் பெருமான் சம்கரித்தருளினார். தேவர்களால், மனிதர்களால், ஆயுதங்களால், மிருகங்களால், தான் சாகமுடியாதபடி வரம் பெற்றான் அவ்வசுரன். எனவேதான் எல்லாம் கலந்த விநாயகர் வடிவம் கொண்டு கஜமுகாசுரனைச் சம்ஹரித்தார்.

கருணைக் கடவுள் :

பிள்ளையார் எளிமையாக அருள் வழங்கும் கடவுள். பெரியவர் கள் தாம் வழிபடலாம் என்பதில்லை. குழந்தைகளும் அவரை வழிபடலாம். அவர் கோயிலில் இருப்பார். குளத்தங்கரையில் இருப்பார்; மண்டபங்களிலும் இருப்பார்; மரத்தடிகளிலும் இருப்பார். சந்தனத்தில் மட்டுமில்லை; சாணியில் கூட அவரை நாம் ஆவாகனம் செய்து வழிபடுகிறோம். இத்தகைய எளிவந்த கருணைக் கடவுள் விநாயகரைத் தவிர வேறு இல்லை.

விநாயகர் எழுத்தாளர் :

விநாயகர் ஆசிரியர் மட்டுமல்ல; அவர் ஒரு எழுத்தாளரு மாவார். வியாசர், பாரதக் கதை உலகில் நிலைபெற வேண்டு

மென்று விரும்பிய போது விநாயகர் தாமே அதனை எழுது வதாகக் கூறி, தனது ஒரு கொம்பால் வியாசர் கூறிய பாரதக் கதையை மேரு மலையில் எழுதி நிலைபெறச் செய்தார் என்பது இதிகாச வரலாறு.

பொல்லாப் பிள்ளையார் :

விநாயகர் ஆசிரியப் பணி செய்த வரலாற்றையும் இங்கு நினைவூட்டல்பொருந்தும். சிதம்பரத்திற்குமேற்கே திருநாரையூர் என்ற ஒரு தலம் உள்ளது. அத்தலத்தில் உள்ள பிள்ளையார் பொல்லாப் பிள்ளையார் எனப்படுவார். பொல்லா என்ற சொல், உளியினுல் செதுக்கப்பெருத என்ற பொருளையுடைய பொள்ளா என்ற சொல்லின் திரிபாகும்.

திருநாரையூரில் பொல்லாப் பிள்ளையாருக்குப் பூஜைசெய்து வந்த அர்ச்சகருடைய பிள்ளை, நம்பியாண்டார் நம்பி எனப் படுவார். அவர் ஒரு முறை தந்தைக்குப்பதிலாக பூஜை செய்யச் சென்ருர். தாம் நிவேதித்த நிவேதனத்தைப் பிள்ளையார் ஏற்றுக் கொள்ளாததால் தாம் ஏதோ தவறு செய்துவிட்டோம் எனக் கருதித் தமது தலையைச் சுவரில் மோதிக்கொள்ளச் சென்ருர். பிள்ளையார் நம்பியாண்டார் நம்பிகளைத் தடுத்து நிவேதனப் பொருள்களை ஏற்று உண்டு வேதம்முதலிய கலைகளைக்கற்பித்தார். இந்நிகழ்ச்சி நாடெங்கும் பரவியது. இதனைக் கேட்டு வியந்த இராசராஜசோழன் திருநாரையூர் வந்து நம்பிகளை வேண்டிப் பிள்ளையாரை வழிபட்டுத் தேவாரத் திருமுறைகள் சிதம்பரத்தில் ஒரு அறையில் பூட்டப்பட்டிருந்த செய்தியை அறிந்து திருமுறைகளை வெளிப்படுத்தினுன். அதனுல் அவ னுக்குத் திருமுறைகண்ட சோழ மன்னன் என்ற பெயர் ஏற்பட்டது. விநாயகர் தான் நமக்குத் தேவாரத் திருமுறைகளை வழங்கியருளினுர்.

தமிழறிவுறுத்தியவர் :

விநாயகருக்கு அடுத்த நிலையில் ஆசிரியராக விளங்குபவர் முருகப்பெருமான். இவர் செந்தமிழ்ப் பரமாசாரியராக விளங்கிய அகத்தியர்க்குத் தமிழறிவுறுத்தியவர். நான் மறைகளிலும் தேர்ந்த நான்முகனுக்குப் பிரணவப் பொருளை உபதேசித்தவர். தந்தைக்கு உண்மைப் பொருளைத் தெரிவித்தவர். அதனுல் இவரைச் சுவாமிநாதன் எனவும், தகப்பன் சாமி எனவும் வழங் குவர். இது உபசாரமாக வழங்கப்பெறுவது. மேல், கீழ், முன், பின், இடம் வலம் ஆகிய பக்கம் இரண்டு ஆக திசைகள் ஆறே உள்ளன. இந்த ஆறு திசைகளிலும் உள்ள உயிர்களைத் தந்து ஆறுமுகங்களாலும் பன்னிருகண்களாலும் பார்த்துப்

பாதுகாத்துவருகின்றான் என்பதை உணர்த்தவே முருகன் ஆறுமுகம் கொண்டு விளங்குகின்றான்.

தக்ஷிணாமூர்த்தி :

சிவபெருமானே குருவடிவம் கொண்டு கல்லால மர நிழலில் அமர்ந்து உண்மைப் பொருள்களைச் சொல்லாமல் சொல்லும் காட்சியை விளக்குவதே தக்ஷிணாமூர்த்தி திருவுருவம். தக்ஷிணா மூர்த்திப் பெருமானிடம் நான்மறைகளையும் ஆறு அங்கங்களையும் கற்றுத் தெளிந்த வல்லவர்களே சீடர்களாக அமர்ந்து இருக்கின்றனர். அவர்களுக்கு உண்மை ஞானத்தைச் சொல்லாமல் (மோன நிலையிலிருந்து) சொல்லியருளுகின்றார் தக்ஷிணாமூர்த்திப் பெருமான். மோனம் என்பது ஞானவரம்பு; தரம் உயர உயர பேச்சுக்குறைகிறது. மேல்நிலைபெறுகின்றனர். தொடக்கக் கல்வி உயர்கல்விகளை முடித்தவர்கள் கல்விகற்கும் இடம் பல்கலைக்கழகம். அங்குள்ள பேராசிரியர்கள் தகுதிவாய்ந்த மாணாக்கர்களுக்குக் கல்வி கற்பிக்கின்றனர். நான்மறை, ஆறங்கங்களைக்கற்றுஉணர்ந் தவர்களுக்கு மயக்கம் நீங்க உண்மை ஞானத்தை அருளுவதால் தக்ஷிணாமூர்த்திப் பெருமானும் பேராசிரியருக்கும் மேலாக விளங்குகின்றார். அவர் திருக்கை சின்முத்திரை யுடன் விளங்கு கிறது. சித் என்றால் ஞானம் முத்திரை என்றால் அடையாளம். சின்முத்திரை மூலம் சீடர்களுக்கு மெய்ஞ் ஞானத்தை உபதேசிப் பதை நமது கை விரல்களை உதாரணமாகக் கொண்டே விளங்கிக் கொள்ளலாம்.

சின்முத்திரை விளக்கம் :

உலகில் எந்தப் பொருளோடும் சேராமல் தனித்து நிற் கின்றான் இறைவன். ஆனால் எந்தச் செயலும் கடவுளையின்றி நிகழாது; அவனன்றிஓரணுவும்அசையாதுஎன்பர். நமது கட்டை விரல், ஏனைய விரல்களோடு சேராமல் தனித்து நிற்கின்றது. கட்டை விரலின் உதவியின்றி நாம் எந்தச் செயலையும் செய்ய இயலாது. எழுதுவதற்கும், ஒரு பொருளை எடுப்பதற்கும், உணவு உட்கொள்வதற்கும், ஆடை உடுப்பதற்கும் கட்டை விரலின் உதவி இன்றியமையாதது. அதனால் கட்டை விரல் கடவுளாகக் கொள்ளப்படுகிறது.

கட்டை விரலைக் கடவுள் என்று கொண்டால் ஆட்காட்டி விரல் – சுட்டுவிரல் உயிர் என்று கொள்ளப்படுகிறது. நாம் எந்தச் செயலைச் செய்யமுற்பட்டாலும் சுட்டுவிரலை நீட்டிக் காண்பித்துச் செயல்படுவதால் சுட்டுவிரல் உயிரின் அடையாள மாகத் திகழ்வதை உணரலாம். அடுத்து உயிர் இறைவனை

அடைய ஒட்டாமல் தடைசெய்வது ஆணவ மலமேயாகும். அவ்வாணவமலத்திற்கு அடையாளமாகத் திகழ்வதே அடுத்துள்ள நடு விரல். ஆணவம் உயிருக்கு அறியாமையைச் செய்வதன்றி ஒரு பயனையும் உதவாதது போலவே நடுவிரலும் நமக்குப்பயன் படாமலிருந்துவருவதால் இவ்வுண்மையை நாம் நன்குணரலாம்.

ஆணவத்தின் வலிமை குறைந்தால்தான் உயிர் இறைவன் திருவருளைச் சேரும். ஆணவத்தின் வலிமை குறைய வேண்டுமானால் அதற்கு உயிர் கர்மாவைச் செய்யவேண்டும். கர்மாவைச் செய்தற்குத் துணைவேண்டும். துணையைத்தான் மாயை என்கிறோம். நடுவிரலுக்கு அடுத்துள்ள விரல் கர்மத்தின் அடையாளம். நாம் சுப அசுப கர்மாக்களைச்செய்யும்போது பவித்திரம் அணிவதால் இவ்வுண்மையை நன்கு தெளியலாம். பவித்திரமே நாளடைவில் மோதிரமாகி, மோதிரவிரல் என்னும் பெயர் பெற்றது. அவ்விரலை, அடுத்துள்ள சுண்டு விரல் மாயையின் அடையாளம். இதனைத் திருமணமான பிறகு அக்கினி வலம் வரும்போது மணாளன் தன் சுண்டுவிரலுடன் மணப்பெண்ணின் சுண்டுவிரலைக் கோர்த்துப்பிடித்துவருவதால் இவ்வுண்மையை இனிதுணரலாம். வாழ்க்கைத்துணைவி இன்றி கர்மாவைச் செய்யக்கூடாது என்பது வேதாகம விதியாகும். உயிர் மாயையின் துணைக்கொண்டு கர்மாக்களை ( நல்வினை, தீவினை ) செய்தால் ஆணவத்தின் வலிமை குறையும். ஆணவத்தின் வலி குறைந்தால் உயிர் இறைவனின் பெருமை உணர்ந்து அவன் திருவடி இன்பத்தில் திளைத்திருக்கும். இவ்வளவு உண்மைகளையும் சின்முத்திரை காட்டுகிறது. நமது கையில் உள்ள விரல்களும் உணர்த்துகின்றன. சிந்தித்தால் தெளிவு பெறலாம் ; சிறப்புறலாம்.

நலம் பெறலாம் :

ஆசிரியர்களாக விளங்கிய இம்மூன்று கடவுளருடைய திருக்கோயில்களை முன்னர்க்கொண்டு விளங்குவது இக் கல்லூரிக்கு. தனிச்சிறப்புத் தருவதாகும். கல்லூரி மாணவர்களும் கடவுள்வழிபாட்டுச் சிந்தனையோடு கல்லூரியில்பயிலமுற்பட்டால் நலம் பெறலாம். இத்திருக்கோயில்களின் குடமுழுக்குப்பணியில் ஈடுபட்ட அன்பநாதபுரம் வகையார் அறத்துறைக் குழுவினர் களும், கல்லூரிப் பேராசிரியர்கள், மாணவர்களும் நலமெலாம் பெற்று வாழச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக் கின்றோம்.



# ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு

"கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" 'என்பதும், ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்பதும் நம் நாட்டில் வழங்கும் பழமொழிகள். மக்களைத் திருக்கோயில் வழிபாட்டில் ஈடுபடுத்தி, சைவ - சமயப் பெருமைகளை அறியச்செய்து உய்விக்கவேண்டுமென்ற பெருங்கருணையால் தருமையாதீனம் 26 - ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தமது குருமூர்த்திகள் காட்டியருளிய வழியிலேயே தமது ஜன்மநட்சத்திரமாகிய ஆயில்யத் திருநாளிலும் பாடல் பெற்ற தலங்கள்தோறும் முறையான வழிபாட்டிற்கு வழி காட்டி வருகிறார்கள். மாதந்தோறும் காவிரி வடகரைத் தலங்களில் வழிபாடு நடைபெறுகின்றன. உழவாரப்பணி, விசேட அபிடேக ஆராதனைகள், தலத்திருப்பதிகங்களை அச்சிட்டு ஓதி வழங்குதல், சமயப் பிரசாரம் முதலியன ஆயில்யத் திருநாள் வழிபாட்டின் அங்கங்களாகும்.

பிங்கள ஸு வைகாசித்திங்கள் 11-ஆம் நாள் (24–5 77) செவ்வாய்க்கிழமையன்று மாத ஜன்ம நட்சத்திரமாதலின் கீழ்க்காணும் திருத்தலங்களில் வழிபாடு சிறப்புற நடைபெறும்.

1. **திருக்கொட்டையூரில்** காலை மணி 8 முதல் 10 வரை ஸ்ரீபந்தாடுநாயகி உடனுறை ஸ்ரீகோடீசுவரர் திருக்கோயிலில் அபிஷேக ஆராதனைகளும் வழிபாடும்.

2 **திருவின்னம்பர்** பகல் மணி 10-30 முதல் 12 வரை ஸ்ரீ பூங்கொம்புநாயகி உடனுறைய ஸ்ரீ எழுத்தறிந்த நாதர் திருக்கோயிலில் அபிஷேக ஆராதனைகளும் வழிபாடும். பகல் 12 மணி முதல் சமய விரிவுரை :-

**வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர்** எம். ஏ,

**புலவர். திரு. இரா. செல்வக்கணபதி** எம். ஏ.,

அனைவரும் வருக! வழிபட்டு உய்க! அரன் அருள் பெறுக!

மதிப்புரை:

# சித்தாந்த வினாவிடை

ஆக்கியோர்: தருமை ஆதீனப்புலவர், சித்தாந்தக் கலைமணி மகாவித்துவான் காஞ்சிபுரம் திரு. சி. அருணைவடிவேல்முதலியார். வெளியீடு: தருமையாதீனம். (முதற் பதிப்பு - 1975), விலை ரூபாய் எட்டு. (400 பக்கங்கள்) கிடைக்குமிடம்: நிர்வாகி, தருமபுரம் ஆதீனம், தருமபுரம், மாயூரம் (வழி), தஞ்சை மாவட்டம், தமிழ்நாடு.

சித்தாந்த நூல்கள் பெரும்பாலும் செய்யுள் வடிவிலே உள்ளன. சிவஞான மாபாடியம் உரை நடைதான்; சித்தாந்தப் பிரகாசிகை, அட்டப் பிரகரணத் தமிழ் உரை முதலிய பிற உரை நடை நூல்களும் உள்ளன, எனினும், இவை யெல்லாம் இக் காலத்தார்க்குக் கடினமானவையாய்த் தோன்றுகின்றன. இவற்றை மிகவும் எளிமைப்படுத்தித் தரவேண்டும் என்பது. தருமை ஆதீன 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் திருவுள்ளம். அம் மகாசந்நிதானத்தின் அருளாணை யின் வண்ணம் இந்த 'சித்தாந்த வினாவிடை' என்னும் நூலை 'ஞானசம்பந்தம்' இதழில் தொடர்ந்து எழுதி வந்தார், காஞ்சி புரம் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்கள்.

இந்நூல் முழுதும் மாணாக்கர் - ஆசிரியர் வினாவிடையாய் அமைந்துள்ளது. ஆசிரியர் மாணாக்கரின் வினாவுக்கு, தெளி வோடும் உதாரண வாயிலாயும் விடையளிப்பது. ஐயப்பாடுகளை அகற்றுவதோடு, சித்தாந்த வியல்புகளைத் தெற்றெனப் புலப் படுத்துவதாய் இருக்கிறது.

இந்நூல் சித்தாந்தப் பொருள்களை ஆசிரியர் இயன்றவரை எளிமைப்படுத்தி யுள்ளார். இது சைவ சித்தாந்தத்தினை நுட்ப மாக விளக்கும் விரிந்த நூல்; சைவசித்தாந்தத்தின் திட்பமும் நுட்பமும் பெற ஆழ்ந்துணர விரும்புவோர்க்கு இது பெரிதும் உதவியாகும்.

இந்நூல் நான்கு பெரும் பகுதியாக அமைந்துள்ளது. அவை, (1) பொதுக் குறிப்புகள். (2) பிரமாணம், அளவை இயல், (3) சித்தாந்தத் தொகைப்பகுதி (4) விரிப்பகுதி என்பன. பதி, பசு, பாச, சாதன, பயன் என்னும் ஐந்து இயல்களாக அமைந்து, ஒவ்வொன்றிலும் அவற்றிற்குரிய பொருள் நுணுக்க

மாக விளக்கப்படுகின்றது. பதி இயலில் 'பதி உண்மை' என்னும் தலைப்பில் 'கடவுள் உண்டு; கடவுள் ஒருவனே; பலர் இல்லை; அவ்வொருவன் அழித்தற் கடவுளே; அவன் மும்மூர்த்திகளின் வேருனவனே' என்பன ஆய்வு முறையில் நிறுவப்படுகின்றன. இதன் பொருட்டு சற்காரியவாதமும், அதன்பகுதியாக சூனியவாதம், அனேகாந்தவாதம் என்பனவும் கூறப்படுகின்றன.

'சித்தாந்தம்' என்பதற்கு முடிந்த முடிவு என்பது பொருள். ஒரு பொருளைப்பற்றி முதற்கண் ஒரு முடிவுகொள்ளப்படும். பின்பு நன்ருக ஆராய்ந்து பார்த்து முடிவாக ஒரு முடிவு கொள்ளப்படும். ஆகவே முடிவான முடிவாகும். சித்தாந்தம் என்பது சைவ சித்தாந்தத்திற்கே பெயராகும். 'பிறநூல் திகழ்பூர்வம் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்' என்பது சிவஞான சித்தி. சைவ சித்தாந்தக் கருத்துக்களை உணர விரும்புவோருக்கு இந்நூல் பெரிதும் பயன்படும். இதனை அனைவரும் பெற்றுப் படிப்பார்களாக.

இந்நூலை வெளியிடத் திருவுளம் பாலித்த தருமை யாதீனம் 26-வது குருமகாசந்நிதானத்தின் பெருங்கருணைக்குச் சைவ உலகமும் தமிழ் உலகமும் நன்றி செலுத்தப் பெரிதும் கடமைப் பாடுடையவை.

நன்றி — தமிழ்நேசன், 27—4—77.

---

**சிறுவர்களுக்கு:**

## உங்கள் திறமைக்கோர் சோதனை !

( வி. சா. கு. )

### வெற்றிலைக் கணக்கு

ஒரு வணிகனுக்கு 3 பிள்ளைகள். வணிகன் தன் பிள்ளைகளின் அறிவுத் திறமையைச் சோதிக்க விரும்பினுன். மூத்த பிள்ளை கையில் 50 வெற்றிலையையும் இரண்டாவது பிள்ளையின் கையில் 30 வெற்றிலையையும் இளைய பிள்ளை கையில் 10 வெற்றிலையையும் கொடுத்து மூத்தவன் விற்ற விலைக்கே அனைவரும் வெற்றிலையை விற்க வேண்டுமென்றும் முடிவில் வெற்றிலை விற்ற தொகை மூவரிடமும் சமமாகவே இருக்கவேண்டுமென்றும் நிபந்தனை விதித்து மூவரையும் கடை வீதிக்கு அனுப்பினுன். தந்தையின் கட்டளையை அப்படியே பிள்ளைகள் மூவரும் நிறைவேற்றி வந்தனர்! அவர்கள் வெற்றிலைகளை எத்தனை எத்தனை காசுகளுக்கு விற்றனர்? எவ்வளவு காசுகள் கொண்டுவந்தனர்?

## வெற்றிலைக் கணக்கின் விடை

(பக்கம் 274, சிறுவர் பகுதி)

மூவரும் முதலில் காசு 1-க்கு 7 வெற்றிலைகள் வீதம் விற்றனர். மூத்தவனிடம் காசு 7-ம் மீதி வெற்றிலை 1-ம்; இரண்டாமவனிடம் காசு 4-ம், மீதி வெற்றிலை 2-ம்; மூன்றாமவனிடம் காசு 1-ம் மீதி வெற்றிலை 3-ம் இருந்தன. அந்திப் போதில் விலை ஏறிற்று. மீதமிருந்தவெற்றிலைகளை மூவரும் ஒருவெற்றிலை 3காசுகள் என்ற வீதத்தில் விற்றனர். ஒவ்வொருவருக்கும் கிடைத்த மொத்த காசுகள் :

| | |
|---|---|
| மூத்தவன் | 7+3= 10 காசுகள் |
| இரண்டாமவன் | 4+6= 10 காசுகள் |
| மூன்றாமவன் | 1+9= 10 காசுகள் |

விலையும் சரியாகக் காசும் சரியாகக் கொண்டுவந்த தன் பிள்ளைகளை வணிகன் பாராட்டினான்.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

**Sri Panchanatheeswaraswamy Devasthanam, Thiruvaiyaru.**

Thanks a lot for enabling us to have an excellant and peaceful Dharshan in the temple.

(Sd.) A. Visvanathan,

Addl. Registrar Co-op. Societies, Lucknow.

* * * *

Sri Sattanathaswami Devasthanam, Sirkali.

I had the great privilege of visiting this temple to day and was greatly impresed by the clean maintance of this vast temple by the authorities in-charge.

(Sd.) R. Rajagopalan,

**Dy. Secretary to Government (Endowements)**

29—12—1976. C. T. & R. E. Department, Madras 9

உ

குருபாதம்

## தருமையாதீனத்தில்

# கோடைக்கால சமயப் பயிற்சி வகுப்பும்

# திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடும்

தருமையாதீனஸ்தாபகர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜைப் பெருவிழாவையொட்டி 29—5—77 ஞாயிற்றுக்கிழமை முதல் 8—6—77 புதன்கிழமை முடிய கோடைக்கால சமயப் பயிற்சி வகுப்பும், திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடும் தருமபுரத்தில் சிறப்பாக நடைபெறவுள்ளன.

சமயப் பயிற்சி வகுப்பு, நாடோறும் காலை 10-30 மணி முதல் 12 - 30 மணி வரையிலும், மாலை 2 - 30 மணி முதல் 4 - 30 மணி வரையிலும் நிகழும். திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டில் பட்டிமண்டபம், கருத்தரங்கம், சிந்தனை மேடை, வழக்காடு மன்றம், கவியரங்கம் முதலிய பல நிகழ்ச்சிகள் நடைபெறும். அவற்றில் அறிஞர்கள் பலர் பங்குகொள்கின்றனர்.

சமயப் பயிற்சி வகுப்பில் சிவாசாரியர்களுக்குச் சிறப்பிடம் அளிக்கப்பெறும். வேத சிவாகமங்கள், ஆலய வழிபாட்டுமுறைகள், பத்ததிகள், கிரியைகள், சைவ சித்தாந்த சாத்திரங்கள், திருமுறைகள், புராணம், இதிகாசம் முதலியபல்வேறு நூல்களைப் பற்றி அவ்வத் துறையில் சிறப்புமிக்க அறிஞர்களால் வகுப்பு முறையில் போதிக்கப்பெறும். பயிற்சி வகுப்பில் கலந்துகொள்வோர்க்கு உணவும் உறையுளும் இலவசம்.

திருக்கோயில்களில் பணிபுரியும் சிவாசாரியர்கள் தங்கள் பெயர், வயது, தகுதி, பணி நிலை முதலியனபற்றித் தெளிவாக எழுதி 23—5—77 தேதிக்குள் மேலாளர், தருமையாதீனம், தருமபுரம், மாயூரம் (அஞ்சல்) 609 001 என்ற முகவரிக்கு விண்ணப்பித்துக்கொள்ளலாம். தேர்ந்தெடுக்கப் பெறுவோர்க்கு அனுமதிக் கடிதம் அனுப்பப்படும். அனுமதிக் கடிதம் பெற்றோர் தங்கள் சொந்தப் பொறுப்பில் வந்து கலந்துகொள்ளலாம்.

# திருந்துதேவன்குடி
# திருவியலூர்த்
# தலச் சிறப்புக்கள்

தருமையாதீனத் தமிழ்ப் புலவர், வித்துவான்,
திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.,

பன்னிரு திருமுறைகளும் பதினன்கு சாத்திரங்களும் சைவ சமயத்தின் இருகண்கள்போல விளங்குவன. இவை முறையே தோத்திரங்கள் எனவும் சாத்திரங்கள் எனவும் வழங்கப்பெறும். அவற்றுள் பன்னிரு திருமுறைகள் திருஞானசம்பந்தர் முதல் சேக்கிழார் ஈருக இருபத்தேழு அருளாசிரியர்களால் அருளிச்செய்யப்பெற்றவை. பதினன்கு சாத்திரங்கள் மெய்கண்டார் முதலிய ஆறு ஆசாரியர்களால் இயற்றியருளப்பெற்றவை.

பன்னிரு திருமுறைகளில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவராலும் அருளிச்செய்யப்பெற்ற ஏழு திருமுறைகள் தேவாரம் எனப்பெறும். பொதுவாகத் தேவாரத்திருமுறைகளின் பாகுபாட்டில் பண்முறை எனவும், தலமுறை எனவும் இருமுறை உண்டு. அவற்றுள் பண்முறை பண்ணெற்றுமைபற்றிப் பாடல்களை வரிசைப் படுத்தியதாகும். முதல் திருமுறை இரண்டாம் திருமுறை என்ற வரிசை பண்முறையில் அமைந்தவை. தலமுறையாவது கோயில் முதலாகத் தலங்களின் வரிசையில் சேர்க்கப்பெற்ற பதிகத் தொகுப்பாகும். இதனை அடங்கன் முறை எனவும் கூறுவர்.

பாடல்பெற்ற சிவதல யாத்திரை புரிவோர்க்கு இத்தல முறை பெரிதும் பயன்படும். நம்நாட்டில் சிவபூசை செய்பவர்கள் தமது ஆன்மார்த்தமூர்த்தியோடு ஒவ்வொரு நாளும் ஒவ்வொருதலத்து மூர்த்தியையும் க்ஷணிகாதி லிங்கங்களில் ஆவாகனம் செய்து உடன்வைத்துப்பூசிப்பதும் அந்தந்தத்தலத்துப் பதிகத்தை அன்று பாராயணம்

செய்தலும் வழக்கம். அதற்குத் தலமுறைப்பதிப்பு பெரிதும் பயன்படுவதாகும். தருமையாதீனம் 26 - வது குருமகா சந்நிதானம் அவர்கள் ஜன்ம நக்ஷத்திர நாட்களில் வெளி யிடப்பெறும் தலமுறைத் தேவாரப் பதிகங்கள் ஒவ்வொரு தலத்தின் பெருமையை உணர்தற்கும் திருமுறைப் பாரா யணம் புரிதற்கும் ஏற்றவையாக உள்ளன,

பாடல்பெற்றசிவதலங்கள் இருநூற்றுஎழுபத்துநான்கு உள்ளன. அவற்றுள் திருந்துதேவன்குடி, திருவியலூர் ஆகிய இருதலங்களும் சோழவள நாட்டுக் காவிரி வடகரைத் தலங்களில் முறையே 42, 43 தலங்களாகத் திகழ்வன.

## 1, திருந்துதேவன்குடி

இத்தலம் திருவிடைமருதூர் இரயில் நிலையத்திலிருந்து வடமேற்கே 6 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. கும்ப கோணத்திற்குக் கிழக்கில் 6 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள திருவியலூருக்குச்சென்று; அங்கிருந்து வடக்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவுசென்றால் கோயிலை அடையலாம். மாயூரத்திலிருந்தும் குடந்தையிலிருந்தும் பேருந்துகளில் இவ்வூருக்குச் செல்லலாம். நண்டு பூசித்த தலம் ஆதலின் இக்காலம் நண்டாங்கோயில் என வழங்கப்பெறுகிறது. சிவபிரான் திருக்கோயில்கொண்டு விளங்கும் தலம் என்ற பொருளமைந்த தேவன்குடி என்பதே ஊர்ப் பெயராதல் வேண்டும். திருந்து என்பது அடைமொழி. அழகிய அல்லது திருத்தமான என்பது இதற்குப் பொருளாகும். தேவாரத்தில் முதல் திருப்பாடலில் மட்டும் எதுகை நோக்கி திருந்துதேவன்குடி என்று வந்துள்ளது. ஏனைய பாடல் களில் தேவன்குடி என்றே குறிக்கப்படுகிறது. பெரிய புராணத்தில் சேக்கிழார் திருஞானசம்பந்தர் முதல் பாடலில் அருளிய திருவாக்கைக்கருதித்'திருந்துதேவன்குடி' என்றே குறிப்பிடுகின்றார்.

திருந்துதேவன்குடி என்னும் ஊர் இக்காலத்தில் இல்லை. கோயில்மாத்திரமே உள்ளது. ஊர் இருந்த இடம் நன்செய் நிலங்களாக இருக்கின்றன. கோயிலைச் சுற்றி மூன்று பக்கமும் அகழிகள் உள்ளன. கருவேல மரங்களின் காட்டில் கோயில் உள்ளது.

இறைவன் திருப்பெயர் :- ஸ்ரீகற்கடகேசுவரர். கற்கடம்- நண்டு. அம்பாள் கோயில்கள் இரண்டு உள்ளன. பிர தான அம்பாள் திருப்பெயர் ஸ்ரீ அருமருந்தம்மை;பிறிதொரு அம்பாள் திருப்பெயர் ஸ்ரீ அபூர்வநாயகி.

**கோயிலமைப்பு :**

திருவியலூர்க் கோயிலுக்கு வடபால் 1 கிலோ மீட்டர் தூரத்தில் திருந்துதேவன்குடி கோயில் உள்ளது. பாடல் பெற்ற மிகப்பெரிய சிவாலயம் இன்று பரிதாபமான நிலையில் காணப்படுகிறது. இடிபாடுகளோடு கோயில் மிகவும் பாழ்பட்டுள்ளது. சுவாமி அம்பாள் கர்ப்பக்கிருகங்களும் முன்மண்டபமும் மட்டுமே உள்ளன.

நாற்புறமும் அகழி சூழ்ந்துள்ளது. கிழக்கு நோக்கிய கோயில். மரங்களும் சுற்றுப்புறம் முழுதும் வயல்களும் உள்ளன. ஊர் இல்லை. கோபுரம் இல்லை; வாயில்மட்டும்உள்ளது. உள்ளே சென்றதும் பெரிய மண்டபம். பிராகாரங்கள் இரண்டும் வலம்வரும் நிலையில் இல்லை. இரண்டாம் கோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றால் மகாமண்டபம். அதை அடுத்து அர்த்த மண்டபம். பிராகாரம் இடிபாடுகளாகவும் முட்புதர்களாகவும் உள்ளன. 'தேனும் வண்டும் இசைபாடும் தேவன்குடி' என்ற தேவாரத் தொடருக்கு ஏற்பத் தேனீக்களின் ஒலி இடையறாது கேட்டுக்கொண்டேயிருக்கிறது.

சுவாமி சுயம்புமூர்த்தி. நண்டுக்கு அருள் புரிந்த பெருமைக்குரியவர். இந்த வரலாற்று ஐதிகம் முன் மண்டபத்தூண் ஒன்றில் பொறிக்கப்பெற்றுள்ளது. சுவாமியின் சிரசில் நண்டுக்கு வீடுபேறளித்த துளை உள்ளது. மழை வேண்டும் காலங்களில் இறைவனுக்கு விசேஷ அபிஷேகங்கள் புரிவித்து இத்துளையில் தண்ணீர் நிரம்பினால் மழை பெய்யும் என்று கூறப்படுகிறது. ஒரு நிறப் பசுக்களின் பால் பத்துக் கலம் அபிஷேகம் செய்தால் சிவலிங்கத்தின் முடிவில் ஒரு பொன்னிற நண்டு ஊர்ந்து வெளியில் வந்து காட்சிதரும் என்றும் கூறுகின்றனர். சிவலிங்கத்தின் பாணம் முன்பக்கம் வெட்டுண்டதுபோலப் பாதியாகக் காட்சிதருகிறது. சிவஸ்தலமஞ்சரியில் இதற்குப் பின்வருமாறு காரணம் எழுதப்பெற்றுள்ளது.

"ஓர் அரசன் வியாதியால் பீடிக்கப்பட்டு சிவஸ்மரணை கொண்டிருக்கையில் சுவாமி விருத்தர்போல வந்து நோயைக் குணப்படுத்தி பின்னும் உள்ள நோய்க்கும் மருந்து தருவதாகச் சொல்லி அழைத்துக்கொண்டு வந்து இலிங்கம்புதைந்துள்ள இடத்தைவெட்டச்சொல்ல இலிங்கம்

வெட்டுப்பட்டு அதிலிருந்து உதிரம் வெளிப்பட விருத்த ராய் வந்த இறைவன் மறைந்தான் என்றும் பின் அம் மன்னன் சிவாலயம் எடுத்துச் சுவாமியைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டான்" என்றும் கூறப்படுகிறது. உட் பிராகாரத்தில் பெரியாநங்கை முதலிய மருந்துச்செடிகள் நிரம்பஉள்ளன. ஞானசம்பந்தர் திருநெல்வேலியிறைவர் மீது பாடிய பாடல் நம் நினைவிற்கு வருகிறது.

மருந்தவை மந்திர மறுமைநன் னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன் சொரிதரத்
[ துன்றுபைம்பூம்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வேலி யுறை
[ செல்வர்தாமே

என்று தொடங்கும் தேவாரத் திருப்பாடலை நாமும் ஓதி வழிபடலாம். சுவாமி அம்பாள் கோயில்களில் மூல விக்ரகங்கள் மட்டும் உரிய இடங்களில் உள்ளன. ஏனைய பரிவார தெய்வத் திருவுருவங்கள் இராஜ கோபுரத்திற்கு அருகில் வரிசைப்படுத்தித் திறந்த வெளியில் வைக்கப்பெற் றுள்ளன. தண்டு பூசித்த விநாயகர், முருகன், இந்திரன், பிருகஸ்பதி ஐயனார், பைரவர், துர்க்கை திருவுருவங்களும் சமயாசாரியர் திருவுருவங்களும் உள்ளன. இங்குள்ள துர்க்கை மிகப் பழமையானதாகும். செப்புத்திருவுருவங்கள் மட்டும் திருவியலூர்க் கோயிலில் வைக்கப்பெற்றுள்ளன.

அம்பாள் கோயில் இரண்டு உள்ளன. மன்னன் ஒருவன் தனக்கு நோய் நீக்கம் செய்தமைக்காக இக் கோயிலைத் திருப்பணிசெய்த காலத்தில் அம்பாள் திரு வுருவம் ஒன்றை அருமருந்தம்மை எனப் பெயர்சூட்டி பிரதிஷ்டைசெய்துவழிபட்டான் என்றும் கனவில் அம்பிகை கூறியருளியபடி பின்னர் இக்கோயிலில் பழமையாக உள்ள அம்பாள் திருவுருவம் கிடைக்கப்பெற்று அதனையும் பிரதிஷ்டைசெய்து அபூர்வநாயகி எனப் பெயரிட்டு வழி பட்டான் எனவும் கூறுவர்.

### தலப் பெருமை :

இந்திரன் நாடோறும் இத்தலத்தினைச் சூழ்ந்துள்ள அகழியில் பூத்த 1008 தாமரை மலர்களால் இறைவனை அர்ச்சித்து வழிபட்டுவந்தான். சில நாட்கழித்து நாடோறும் ஒருபூ குறைவலைதக்கண்ட இந்திரன் காரணம் புரியாது

அகழியைத் தானே காவல் புரிந்தான். ஒரு தாமரை மலர் நாடோறும் நீரில் அமிழ்வதையும் அதையடுத்துக் குமிழிகள் தோன்றுவதையும் கண்டான். பின் அத்தாமரை மலர் இறைவன் திருமுடிமேல் காணப்பட்டது. இது எவ்வாறு நிகழ்கிறது என்பதை அறிய விரும்பிய இந்திரனுக்கு 'இறைவன் நண்டொன்று தம்மையும் விநாயகரையும் நாடோறும் வழிபடுவதையும் அதுவே தாமரை மலர் ஒன்றினைப் பறித்து வந்து தம் திருமுடி மேல் சூட்டி வழி படுகிறது' என்பதையும் தெரிவித்தார். தம் திருமுடியில் உள்ள துளை வழியாக நண்டுக்கு மோக்ஷமளித்தார். இந்திரன் வியந்து சிற்றுயிர்க்கும் அருள் புரியும் சிவபிரான் கருணையைவியந்து புகழ்ந்தான் என்பது இத்தலத்தைப் பற்றிய வரலாறு.

நண்டுபூசித்த மூல லிங்கமும் தல விநாயகரும் மிகப் பழமையான திருவுருவத்தோடு விளங்குகின்றனர்.

தேவாரப் பாடல் பெற்ற இச் சிவாலயம் பாதுகாப் பின்றி பழுதுற்ற நிலையில் உள்ளதைக்காணும்போது நம் நெஞ்சு நெகிழ்கிறது. ஒரு கால பூஜை மட்டுமே நிகழ்ந்து வருகிறது. விரைவில் திருப்பணிகள் செய்யப்பெற வில்லை யானால் கோயில் முழுவதும் சீர்கெடும் நிலையை அடைந்து விடும். பழுதுற்ற சிவாலயங்களைத் திருத்தித் திருப் பணிகள் செய்விப்பவருக்குச் சிவபுண்ணியம் மிகுதியும் உண்டாகும்.

திருவ ரங்கு திருமதில் கோபுரம்
மருவு மண்டபம் வானவர்க்கு அன்பொடு
கருவ ரம்பறக் கண்டவர் கண்ணுதல்
உருவம் நன்குடி மேவுவர் உண்மையே.

மாதவர் மடங்க ளாதி வரதன்மந் திரங்க ளாதி
நாதமாம் இலிங்க மாதி நளினபுட் கரிணி யாதி
சேதமுற் றிடின்முன் போலச் செய்கின்றோர்க்கு
[கூறும் பலந்தான்
ஓதுமுன் செய்தோர் தம்மில் ஆயிரம் குணிதம் ஓங்கும்.

என்பன சிவபுண்ணியத் தெளிவு என்ற நூலில் கூறப்படும் பாடல்கள்.

## 2. திருவியலூர்

இத்தலம் திருவிசநல்லூர் என்று வழங்கப்படுகிறது. இது திருவிடைமருதூர் ரயில்வே நிலையத்திலிருந்து வட மேற்கே வேப்பத்தூர் மார்க்கத்தில் நான்குமைலில் உள்ளது காவிரியின் வடகரையில் அமைந்த பூம்புகார் - கல்லணை சாலையில் திருபுவனத்துக்கு நேர் வடக்கே உள்ளது. கும்ப கோணத்திலிருந்தும் மாயூரத்திலிருந்தும் பேருந்து வசதி உள்ளது. சுவாமி பெயர் யோகானந்தீசுவரர். அம்மை பெயர் சாந்தநாயகி. தீர்த்தம் சடாயு தீர்த்தம். இறைவன் புராதனேசுவரர், வில்வாரண்யேசுவரர் எனவும் பெயர் பெறுவர். அம்மை சௌந்தரநாயகி எனவும் வழங்கப் படுவர். ஜடாயு வழிபட்டுப் பேரின்பம் எய்திய தலம்.

**கோயிலமைப்பு :**

பேருந்துச் சாலையிலிருந்து ½ கிலோ மீட்டர் தூரம் வடக்கே சென்றால் கோயிலை அடையலாம். நாட்டுக் கோட்டை நகரத்தார் திருப்பணியால் கோயில் புதிய பொலிவோடு நன்கு பரிபாலிக்கப்படுகிறது.

ஐந்து நிலைக்கோபுரத்தைக்கடந்து உள்ளேசென்றதும் கொடிமரமும் நந்தி பலிபீடங்களும் உள்ளன. மூலாதார கணபதி நம் வழிபாட்டுக்குரியவராய் விளங்குகின்றார். இரண்டு பிராகாரங்கள் உள்ளன. வெளிப்பிராகாரத்தில் கொடிமரத்திற்கு அருகில் தெற்குநோக்கி அம்பாள் திருக் கோயில் உள்ளது. வெளிப்பிராகாரத்தின் பெரிய புறச் சுவரையொட்டி மூன்று புறமும் நந்தவனம் அமைந்துள் ளது. கோயிலுக்கு வேண்டிய மலர்களைத் தரும் பெரிய நந்தவனமாக நன்கு பரிபாலிக்கப் பெறுகிறது. அம்பாள் சந்நிதிக்கு எதிரே உள்ள வெளிப் பிராகாரச் சுவரில் சூரியனது ஒளி நிழலைக்கொண்டு மணி அறியும் நிழற் கடியாரம் ஒன்று வரையப் பெற்றுள்ளது. இக்கடியாரம் பகலில் மிகத்துல்லியமாக மணி காட்டுகிறது.

கோயில் முகப்பில் பெரிய தகரக்கொட்டகை அமைக்கப் பெற்றுள்ளது. இரண்டாங் கட்டைக் கோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றதும் மகா மண்டபம். அதை யடுத்து உட்பிராகாரம். தெற்குப் பிராகாரத்தில் சப்த மாதாக்கள், சமயாசாரியர், சேக்கிழார் திருவுருவங்கள்

உள்ளன. மேற்குப் பிராகாரத்தில் விநாயகர், சுப்பிர மணியர், மகாலக்ஷ்மி, பஞ்ச லிங்கங்கள் உள்ளன. கர்ப்பக் கிருகக் கோஷ்டங்களில் விநாயகர், தக்ஷிணாமூர்த்தி, திருமால், பிரமர், துர்க்கை திருவுருவங்கள் உள்ளன.

மகா மண்டபத்தின் வடபால் நவக்கிரகங்களும் பைரவர் திருவுருவமும் விளங்குகின்றன. அர்த்த மண்ட பத்தில் பஞ்சமூர்த்திகளின் திருவுருவங்கள் எழுந்தருளு விக்கப் பெற்றுள்ளன. திருந்துதேவன்குடித் திருக்கோயில் விக்கிரகங்களும் இங்கு எழுந்தருளுவிக்கப் பெற்றுள்ளன.

அர்த்த மண்டபத்தைக் கடந்து கர்ப்பக் கிருக நுழை வாயிலை அடைந்தவுடன் சிவலிங்கப் பெருமானை வழி படலாம். திருஞானசம்பந்தர் இத்தலத்திற்கு எழுந்தருளிய போது இறைவன் அவருக்கு அருளார் திருவேடம் காட்டி யருளினார். இதனை இத்தலத் திருப்பதிகத்து ஐந்தாம் திருப்பாடலில் ஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார்.

எண்ணார்தரு பயனாய் அயனவனாய்மிகு கலையாய்ப்
பண்ணார்தரு மறையாய்உயர் பொருளாய் இறையவனாய்க்
கண்ணார்தரும் உருவாகிய கடவுள்ளிடம் எனலாம்
விண்ணோரொடு மண்ணோர்தொழும் விரிநீர் வியலூரே.

என்ற தேவாரத் திருப்பாடலை ஓதி நாமும் வழிபடலாம்.

அம்பாள் சந்நிதியில் அழகான முன்மண்டபமும் அதை அடுத்துத் தகரக் கொட்டகையும் அமைக்கப் பெற்றுள்ளன. மண்டபத்தில் அஷ்டலக்ஷ்மி உருவங்கள் ஓவியங்களாக எழுதப் பெற்றுள்ளன, அம்பிகை சௌந்தர நாயகி என்ற பெயருக்கு ஏற்ப அழகிய திருவுருவத்தோடு காட்சியளிக்கின்றாள்.

## தலப்பெருமை :

இத்தலத்திற்குத் தமிழ் மொழிபெயர்ப்புடன் வடமொழி யில் தலபுராணம் உள்ளது. கேரள தேசத்து மன்னன் மகன் கணபதி என்பவன் காமக்கிழத்தியர் பலரோடு கூடி அறநெறிக்கு மாறான பலசெயல்களைச் செய்து வந்தான். இத்தலத்தில் காவிரி நதியில் நீராடிய சிறப்பால் பாவங்கள் அனைத்தும் நீங்கப்பெற்று சிவலோகம் பெற்றான் என்றும்; கோகுலம் என்னும் நகரில் அரசன் ஒருவன் முன்னோர் செய்த பெண் கொலைப்பழியால் துன்புற்று இத்தலத்தை

அடைந்து இறைவனை வழிபட்டு பழி நீங்கப் பெற்றான் என்றும்; அந்தணன் ஒருவன் தன் கர்மானுஷ்டங்களைக் கைவிட்டு இழிதொழில் புரிந்துவந்தான் என்றும் இத்தலத் திறைவனை வழிபட்டு அனைத்துப் பாவங்களும் நீங்கப் பெற்றான் என்றும் இத்தலபுராணம் கூறுகிறது.

சிவனடியாரைக் கவரவந்த இயமனை நந்திதேவர் தண்டித்தார் என்பதும், இயமன் சிவயோகீசுவரரை வணங்கி நந்தி தேவருக் கிழைத்த குற்றத்திற்கும்; சிவனடியார்களின் உயிரைக் கவரவந்த குற்றத்திற்கும் மன்னிப்பு வேண்டி இறையருள் பெற்றான் என்பதும் இத்தல புராணத்தில் காணப்படுகின்ற பிறிதொரு வரலாறாகும்.

நந்தி தீர்த்தம், இலக்குமி தீர்த்தம், சரசுவதி தீர்த்தம், பிரம குண்ட தீர்த்தம் சடாயு தீர்த்தம் என்னும் தீர்த்தங் களும் அவற்றின் கரையில் முறையே வன்னி, வில்வம் புன்னை, மகிழ், ஆல், நெல்லி, அரசு. வில்வம் என்னும்எட்டு மரங்களும் உள்ளன.

தஞ்சாவூர் அரண்மனையாரின் பரிபாலனத்திற்குட் பட்ட ஆலயங்களில் ஒன்றாகும்.

பதினான்கு சாத்திரங்களில் ஒன்றாகிய திருவுந்தியாரை இயற்றியருளிய திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் இத் தலத்தில் அவதரித்தவர்கள்.

அண்மைக்காலத்தில் ஸ்ரீ தர ஐயர் பசியால் வருந்திய அரிசனன் ஒருவனுக்கு சிரார்த்ததினத்தன்று அன்ன மளித்தது குற்றமன்று என்பதை மெய்ப்பிப்பதற்குக் கங்கையை வரவழைத்தல் போன்ற அற்புதங்களை நிகழ்த் தியது இத்தலத்தில்தான்.

**கல்வெட்டுக்கள் :**

தருமையாதீனத் திருமுறை வெளியீடுகளில் முதல் திருமுறையில் வெளியிடப்பெற்ற கல்வெட்டுக்கள், அரசிய லார் படியெடுத்த கல்வெட்டுக்கள் மொத்தம் 94 உள்ளன. இத்தலம் கி. பி. 985—1013-ல் அரசாண்ட முதல் இராஜ கேசரிவர்மன் காலத்து அவனிநாராயண சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்ததென்றும், 1011—1048-ல் அரசாண்ட

இராஜேந்திர சோழதேவன் காலத்து வடகரை இரா ஜேந்திர சிம்ம வளநாட்டு மண்ணிநாட்டுப் பிரம்ம தேயமான வேப்பத்தூர் சோழமார்த்தாண்ட சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்தது என்றும் தெரிகிறது. சுவாமி பெயர் சிவயோகநாதர் எனவும் உமாமகேசர்க்கு ஆண்ட நாயகர் எனவும் கல்வெட்டுக்கள் பெயர் கூறுகின்றன. இத் தலத்துக் கல்வெட்டுக்களால் குறிக்கப்படுகின்ற சோழ மன்னர்கள் பன்னிருவர். பாண்டியர் ஒருவர். விஜயநகர கிருஷ்ணதேவராயர் ஒருவர். இவர்களில் கி. பி 862 முதல் 894 வரை ஆண்ட பாண்டிய மன்னனுகிய வரகுணபாண்டி யனது 38-ம் ஆண்டின் நிகழ்ச்சி ஒன்று குறிக்கப் பெறுவ தால் இக்கோயில் அதற்குமுன்பே கற்றிருப்பணியாகச் செய்யப்பெற்றமை தெளிவு.

பராந்தகன் I கி. பி. 907 முதல் 947 வரை ஆட்சி நடத்தியவன். இவனுடைய ஆட்சி 16-ம் ஆண்டில் விளக் கீட்டிற்காக ஆடுகள் விடப்பட்டன. பொன்னும் கொடுக்கப் பெற்றன. இவன் மதுரைகொண்ட பரகேசரி வர்மன் எனக் குறிக்கப்படுகின்ளுன்.

பராந்தகன் II காலத்தில் விளக்குக்காகப் பொன்னும் ஆடுகளும், அபிஷேகத் திரவியங்கட்காக நிலமும் அளிக்கப் பெற்றன. செம்பியன் காரைக்காடு உடையாளுலும் பராந் தகப் பல்லவராயன் என்பவனுலும் விளக்கிற்காக ஆடுகளும் பணமும் அளிக்கப்பெற்றன. இவன் தருமங்களில் விளக்கிற் காக அளித்தமையே பெரிதும் காணப்படுகின்றன. விசலூர் உடைய நாயனுர்க்குத் திருமஞ்சனநீர் காவிரியிலிருந்து கொண்டுவர நிலம்விட்டான். இதில் திருவிசலூர் மகாதேவ பட்டாரகர் என இறைவன் திருநாமம் குறிக்கப்படுகின்றது.

முதல் இராஜராஜன் கி. பி. 985 முதல் 1013 வரையில் ஆண்டவன். இவன் காலத்தில் கோவில் விளக்குக்குப் பணம் கொடுக்கப்பட்ட செய்திகள் குறிக்கப்படுகின்றன. கிராமங்களின் நிலவிற்பனைகளும் பொறிக்கப்பெற்றுள்ளன. இவனுடைய அரசி ஒருத்தி பொன்னளித்திருக்கின்ருள். திருமஞ்சனத்தில் இடம்பெறுகின்ற ஸ்நான திரவியங்களுக் காகவும், பிராமண போஜனத்திற்காகவும் பொன்னளித் திருக்கிருள். மிகச் சிறப்பாக இவன் ஆட்சி 29-ல் அரசன் துலாபாரம் புக்குத் தானம் செய்தான் என்றும், அரசி தந்திசத்தி விடங்கியாரான லோகமாதேவியார் ஹேமகர்ப்ப

தானம் செய்தாள் என்றும் குறிக்கப்பெறுகின்றன. பிச்சு தேவன் என்னும் அரசகாரியம் பார்ப்பான் கருப்பக்கிருகப் பணிக்காக நிலம்விட்டமைதெரிகிறது.

இராஜேந்திரன்: இவன் கி. பி 1011 முதல் 1043 வரை ஆண்டவன். இவன் காலத்திய கல்வெட்டுக்கள் பதின் மூன்று உள்ளன. அவற்றுல், திருவிசலூர் உடைய மகா தேவர்க்குத் தங்கக் கச்சை அளித்ததும், சிதாரிக்காக நறும் புகையிட நிலம் அளித்ததும், விளக்கிடப் பணமும் நிலமும் ஆடுகளும் அளித்ததும் அறிவிக்கப்பெறுகின்றன. அவனு டைய மனைவியான அரசியொருத்தியால் அபிஷேகத்திற்கு வெள்ளிக்கலசம் ஒன்று அளிக்கப்பெற்றது. இவன் தனது மூன்ருவது ஆண்டில் திருவிசலூர்மகாதேவர் கோயிலையும், கோபுரத்தையும் திருப்பணி செய்தான். இவன் மனைவி யான நக்கன் செம்பியன்மாதேவியாரால் திருவிளக்குக்கு ஏற்பாடு செய்யப்பெற்றது.

இவனுக்கு உருத்திரன் அருள்மொழியான பிருதி மகாதேவி என்றெருரு மனைவியும் இருந்தாள். இவனுக்கு அத்தையும், முதல் இராஜராஜன் மூத்த சகோதரியும், பல்லவராயர் வந்தியத்தேவர் மனைவியுமான குந்தவ்வை தேவியார் பழையாறையில் இருக்கும்போது நிலம் அளித் தார் என்ற செய்தியை அறிவிக்கும் கல்வெட்டு சரித்திர ஆராய்ச்சியாளர்க்குப் பெருவிருந்தாவது.

குலோத்துங்கன் III இவன் கி. பி. 1178 முதல் 1218 வரையாண்டவன். இவனுடைய ஆட்சி பதினெட்டாம் யாண்டில் நில விற்பனையைப் பற்றிக் கூறுகிறது. அதில் வேம்பத்தூர், எதிரிலிச்சோழர் சதுர்வேதி மங்கலமான வேம்பத்தூர் என அழைக்கப் பெறுகின்றது. ஏனைய முதல் மூன்று கல்வெட்டுக்கள் அரசாங்க நில அளவை முறை களையும் நில விற்பனையையும் அறிவிப்பன.

தெற்குப் பிராகாரத்தில் உள்ள கர்ப்பக்கிருகத்தின் வடக்குச் சுவரில் அந்த மண்டபத்தைக் கட்டினவனுன ஆனந்த சிவன் என்பவனுடைய உருவம் இருக்கிறது. அதில் ஒருபகுதியைச் சுவர் மறைத்துவிட்டது.



# சிவமூர்த்தங்கள்

"நஜன்"

## 3. லிங்கோற்பவ மூர்த்தி

மைந்த நின்னை என் வலப்புறத்தளித்தனனறிய
பைந்து ழாய் மதுவண்ணனை யென் இடப்பாலிற்
றந்தனன் நீவிர் வெங்கரிமுன் அழல்வேற்கந்தனேரெனக்
கருணையினல் உச்சி மோந்துரைத் தான்.

—கூர்ம புராணம்.

சிவாலயங்களில் கர்ப்பக் கிரகத்தில் சிவனது பின்புறம் லிங்கோற்பமூர்த்தியைக் காணலாம். சிவபெருமானது அடியை விஷ்ணுவும் முடியை பிரம்மதேவரும் தேடி தோல்வியுற்ற வரலாறு கொண்டதே இம்மூர்த்தம்.

பிரம்மனுக்குத் தன் படைப்புத்தொழில் இல்லையேல் உலகமே யில்லை என்ற அகங்காரம் ஏற்பட்டது. அம்மாதிரியே திருமாலுக்குத் தன் காப்பாற்றும்தொழில் இல்லையேல் உலகம் என்னவாகும் என்ற பெருமிதம் ஏற்பட்டது. ஆகவே பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்குமிடையே யார் பெரியவர் என்ற தகராறு ஏற்பட்டுவிட்டது. அப்போது இருவருக்குமிடையே ஒரு ஜோதி எழுந்தது. இதன் அடி முடி கண்டவர் தான் பெரியவர் என்று முடிவு செய்து பிர்மா அன்னமாகவும் விஷ்ணு பன்றியாகவும் உருவெடுத்து முயன்றும் அவர்கள் வெற்றி காணமுடியவில்லை. இந்த அடிமுடி தேடிய கதையின் தத்துவார்த்தம் என்ன?

கீழ் நோக்குவது தாமதகுணம். மேலோங்கி நிமிர்வது ராஜஸ குணம். தாமத குணத்தாலும், ராஜஸ குணத்தாலும் இறைவனைக் காணமுடியாது. சத்துவ குணத்தால்தான் முடியும்

பன்றி, காடு குப்பைகூளங்களில் மேயும்; ஆனல் அது தாமரையான பாதங்களைத் தேடிச்சென்றது. தாமரையில் வாழும் அன்னம் ஜடாமுடியாகிய காட்டை நோக்கிச் சென்றது. இயல்புக்கு மாருகச் சென்ருல் இறைவனைக் காணமுடியாது. திருமால்

திருமகளின் நாயகன். பிரம்மா கலைமகளின் நாயகன். பணத்தின் செருக்கினாலும் படிப்பின் முறுக்கினாலும் பரமனைக்காணமுடியாது. பக்தி ஒன்றாலேயே காணலாம். அவர்கள் இருவரும் உள்ளே இருக்கின்ற இறைவனை வெளியே தேடினார்கள். ஆனால் காண முடியவில்லை. இறைவனை அழுதாலும் காணலாம். ஆனால் ஆராய்ச்சியால் காணமுடியாது. திருமாலும் நான்முகனும் தேடிக் காணாத தேவனை எண்ணுள்ளே தேடிக் கண்டுகொண்டேன் என்கிறார் திருநாவுக்கரசர்.

நாடி நாரணன் நான்முகன் என்றிவர்
தேடியுந் திரிந்தும் காணா வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத்
தாடிபாதம் என் நெஞ்சுள் இருக்கவே.

இப்படி ஜோதியாய் நின்ற சிவம் இப்புண்ணிய பூமியில் 12 இடங்களில் ஜோதிர்லிங்கமாகக் காட்சியளிக்கிறார்.

## சிவமூர்த்தம்

இந்த அடிமுடிதேடிய வரலாற்றில் இறைவன் சிரசிலிருந்து வந்த தாழம்பூவைக் கண்ட பிரம்மன் இறைவனின் முடியைக் கண்டுவிட்டதாக ஒரு பொய் சொல்லி சாபம் பெறுகிறான். அந்த சாபம் நீங்க விரிஞ்சபுரம் (மதராஸ் பங்களூர் பாதையிலுள்ளது) சிவநாதன் குருக்களின் மகனாகப்பிறக்கிறான், சிவசருமன் என்ற பெயருடன்.

தந்தை காலமாகிவிடவே தாயாதியர் உன் குடும்பத் தொழிலாகிய சிவபூஜை செய்யும் அருகதைபெற்றால்தான் உனக்குச் சொத்து கிடைக்கும் என்கிறார்கள். பையனுக்கு சிவதீக்ஷை ஆகவில்லை. எப்படி கோயிலுக்குச் சென்று பூஜை செய்வது? தாயாருக்கும் ஒன்றும் தெரியவில்லை. அன்றிரவு அதாவது கார்த்திகை மாதம் கடை ஞாயிறுக்குமுன் இரவு (சனி) அவள் கனவில் உன்பையனைப் பூஜை செய்ய கோவிலுக்கு அனுப்பு என்று இறைவன்சொல்கிறான்.

மறுநாள் சிவசருமன் கோயிலுக்குப் பூஜைசெய்யபோக இறைவனே விருத்தப் பிராமணராக வந்து இளைஞனுக்கு சிவதீக்ஷை எல்லாம் செய்து வைக்கிறார். ஆகம விதி தவறாமல் பூஜைம் செய்ய முற்பட்டு விட்டான். அபிஷேகம் செய்ய குடத்தை எடுத்தபோது இறைவன் திருமுடி அவனுக்கு எட்டவில்லை. இறைவனே தன் தலையை வளைத்துக்கொடுக்கிறார்.

அலை வளைந்திடும் புவியிடத்து உடல் உயிர்
அனைத்தும் தலைவளைந்தன, வளைந்தன இமையவர் தருவும்
சிலைவளைந்திடும் செயலினைத் திசைதிசை செறிந்த
மலைவளைந்தன வழித்துணை அவர் முடிவளைக்க.

என்று இறைவன் தலை வளைத்தப் பெருமையைத் திரிவிரிஞ்சைப் புராணத்தில் சைவ எல்லப்ப நாவலர் பாடுகிறார்.

## தாணுமால் அயன் ஆலயம்

சிவபெருமான் ஒளிப்பிழம்பாக ஒரு தூண்மாதிரி நின்றாரல்லவா? அதேபோல் தாணுவே லிங்கமாக உள்ள தலம் சுசீந்திரம் (கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ளது.) ஆகாயத்திற்கும் பூமிக்குமாக ஜோதிப் பிழம்பாக தூண்போல் நின்று பின் பிரம்மனையும் விஷ்ணுவையும் தன்னுள் சேர்த்துக் கொண்டதை விவரிக்கும் மூர்த்தம் தாணுமாலயம். இந்தத்தூண் லிங்கத்தின் மேல்பாகம் சிவ அம்சமாகவும், நடுப்பாகம் விஷ்ணு அம்சமாகவும், கீழ்ப்பாகம் பிரம்ம அம்சமாகவும் கருதப்படுகிறது.

இங்கு அர்த்த ஜாம பூஜை இந்திரனால் நடத்தப்படுகிறது. சிவராத்திரி அன்றுகூட இரவில் இந்திரன் பூஜைதான். மாலை பூஜை செய்தவர் மறுநாள் காலை பூஜை செய்ய அனுமதிக்கப் படுவதில்லை. உள்ளே ஏதேனும் மாறுதல்கள் கண்டால் அதை வெளியே தெரிவிக்கக் கூடாது.

## சதாசிவ, மகாசதாசிவ மூர்த்தங்கள்

லிங்கம் அருவுருவம். உருவமும் எம்பெருமானுக்குக் கற்பிக்கப்படுகிறது. இதைப்பற்றி அறியுமுன் சாதாக்யம் பற்றி அறியவேண்டும். இதைப்பற்றி அறியவேண்டும் என்றால் எப்போதும் புகழப்படுவது எனப்பொருள். சக்தியுடன் கூடியே சாதாக்யம் ஏற்படுவது.

அருவம் நிஷ்களசிவம்; அதாவது உருவமில்லாத இறைவன்; இவனுடன் கூடிய சக்தி நிஷ்கள சக்தி. துங்கபத்ரா மாகாத்மியத்தில் தக்ஷிணகாசி குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு மேற்கு பார்த்த சந்நிதி. இத்தலத்தில் பித்ருகாரியங்கள் செய்வது விசேஷம்.

இங்கு பாதாளக்கரை என்ற இடத்திலுள்ள சிவலிங்கம் மூன்று தலைகளுடனும் ஆறு கைகளுடனும் விளங்குகிறது. ஒரு கையில் சங்கும் ஒரு கையில் சூலமும் இருக்கின்றன. இந்த லிங்கம் நந்தியின்மேல் அமைந்திருக்கிற பாவனையில் உள்ளது.

## ஐந்து சாதாக்கியங்கள் உள்ளன

| | | அதிபர் | முகம் |
|---|---|---|---|
| உருவமற்றது | பராசக்தியிடமாகத் தோன்றியது சிவசாதாக்கியம். | சதாசிவன் | ஈசானம் |
| அருஉருவம் | ஆதிசக்தி அம்சமாய்த் தோன்றியது அமூர்த்திசாதாக்கியம் | ஈசன் | சத்யோஜாதம் |
| உருவம் | இச்சாசக்தி அம்சமாய்த்தோன்றியது மூர்த்திசாதாக்கியம் | பிரமீசன் | வாமதேவம் |
| ஞானம் | ஞானசக்தியின் அம்சமாய்த்தோன்றியது கர்த்திருசாதாக்கியம் | ஈசுவரன் | அகோரம் |
| செயல் | கிரியாசக்தியின் அம்சமாகத் தோன்றியது கன்மசாதாக்கியம் | ஈசானன் | தத்புருடம் |

ஐந்தியர் சக்திகளா யினோர் அமைத்
தந்தது மருவுந் தாங்கி யவ்வழிச்
சிந்தனை யருச்சனை செய்து யாவரு
முய்ந்திட சதாசிவ வுருவைந் துற்றதும்.

— கந்த புராணம்.

சதாசிவனுடைய ஐந்து முகங்களே பஞ்சாக்ஷரம். இதை,

அரியதோர் நமசிவய ஆதியந்த மானதும்
ஆறிரண்டு நூறுகோடி அளவிடாத மந்திரம்.

எனப் பண்டைய சித்தர்கள் பாடியிருக்கிறார்கள்.

இந்த ஐந்து முகங்களையும்கொண்ட சிவத்யானம் மிக விசேஷமானது.

( தொடரும் )

# "சங்கம் தரும் முத்தும் முத்தியும்" *

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,
திரு. ந. ரா. முருகவேள் M. A., M. O. L.,

## முன்னுரை :

தில்லைவானவன் ஆகிய நடராசப் பெருமானையே, சிறப்பாகத் தமது மனமொழி மெய்களினால் வழிபட்டு அருள்பெற்ற மாட்சியுடையவர் மாணிக்கவாசகர். அவர் பாடியருளிய தெய்வீகத் திருநூல்கள் இரண்டு. ஒன்று திருவாசகம், மற்றொன்று திருக்கோவையார்.

## மணிவாசகர் :

தில்லைவானவன் ஆகிய சிவபெருமான், மாணிக்கவாசகரை ஆட்கொண்டருள விரும்பினான். அதற்காக, எல்லாப் பொருள்களையும் தனக்குள் அகப்படுத்திக்கொண்டு நிற்கும் வானத்தையும் கூடக் கடந்து நிற்கின்ற அப்பெருமான், வான்பழித்து இம் மண் புகுந்தான். பொங்கும் புனற் கங்கையைச் சூடி, ஆரவாரம் மிக்க கழுகுகள் ஆகிய பறவைகள் சூழும் வண்ணம், உயர்ந்த தலையோடு ஆகிய கபாலத்தை ஏந்தியிருக்கின்ற அவ்விறைவன், மனித வடிவம் கொண்டு மண்ணுலகத்திற் போந்தான். திருப்பெருந்துறையிற் குருந்தமர நீழலில், திருவைந்தெழுத்தை உபதேசித்து, மாணிக்கவாசகரை ஆட்கொண்டருளினான்.

## சற்சங்கம் :

பின்னர், "இவ்வுலகிலேயே சில காலம் இரு" என்று சொல்லி, இறைவன் மாணிக்கவாசகரைப் பிரிந்து மறைந்து சென்று விட்டான். இந்நிலையில் இறைவனைப் பிரிந்து, மாணிக்கவாசகர் பெரிதும் வருந்தினார். மறுமுறையும் இறைவனைக் காணவும், அவன் அருளைப் பெறவும் பெரிதும் விரும்பினார். அடியவர்களின் அன்பும் உறவும் பெற்று, அவர்களின் திருக்கூட்டத்தில் தாமும்

---

* சென்னைத் தியாகராயநகர்த் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தில் நடைபெற்று வரும் " திருக்கோவையார் " வகுப்பில் விளக்கிய கருத்துக்களைத் தழுவியது.

இடம்பெற்றுக் கலந்து பழகினுல், இறையருட்பேறும் முத்தி யின்பமும் எய்தலாம்; அடியார்களின் கூட்டுறவு ஆகிய சற்சங்கம் தான், முத்தியைத் தரும் எனத் தெளிந்தார். அதனுல் மணி வாசகர் சற்சங்கம் என்னும் அடியார் நடுவுள் இருத்தல் ஆகிய பேற்றையே மிகுதியும் பெற வேட்கை மீதூர்ந்து நின்ருர்.

"உடையாள் உன்றன் நடு இருக்கும்
உடையாள் நடுவுள் நீ இருத்தி;
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானுல், அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும் அரு
ளைப்புரி யாய்; பொன் னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து
முடியும் வண்ணம் முன்நின்றே!"

எனவரும் இனிய திருவாசகச் செய்யுளில்; மாணிக்கவாசகர் அடியார் நடுவுள் இருக்கும் சற்சங்கத்தையே பெரிதும் விரும்பி வேண்டிப் பாடியிருத்தல் காணலாம்.

## திருக்கோவையார் :

திருக்கோவையார் என்னும் சிறந்த தமது பிறிதொரு நூலி லும்கூட, மாணிக்கவாசகர் சற்சங்கத்தின் நற்பெரும் பயன்பற்றிக் குறிப்பிடுகின்ருர். திருவாசகக் கருத்துக்களையே, உலக மக்களின் பொருட்டு, அவர்கள் உவக்கும் வகையில் அமைத்துப் பாடி விளக்குவது திருக்கோவையார். சுருங்கக் கூறலுறின், பேரின்ப அநுபவச் செய்திகளையே, உலக மக்களின் பொருட்டுச் சிற்றின்பக் காதலியற் செய்திகளில் வைத்துத் திறம்பட விளக்குவது, திருக் கோவையாரின் தனிப்பெரும் சிறப்பு எனலாம்.

## தலைவியும் தோழியும் :

தலைவன் ஒருவன், ஒரு சோலையில் தலைவி ஒருத்தியை முன்னைத் தனது நல்லூழின் வயத்தினுற் கண்டான். அவள்பாற் காதல் கொண்டான். அவளை அடைதற்பொருட்டு, அவளது உயிர்போன்ற அருமைத் தோழியின் துணையை நாடினுன். அவள், அவனது அன்பின் உண்மையியல்பினைப் பலவகையாலும் ஆராய்ந்து தேர்ந்தறிந்து, தலைவியின்பாற் சென்று, தலைவனின் காதலன்பின் நிலைபற்றிக் கூறியுணர்த்த முற்பட்டாள். அது கேட்டுத் தலைவி, தனது உள்ளத்தில் பெரிதும் மகிழ்ச்சியுற்ரு ளாயினும், பெரு நாணம் உடையவளாதலின், தோழியின்

சொற்களைக் கேட்டும் கேளாதவள் போலப் பாசாங்கு செய்து, தனது எதிரே தோன்றும் கடலின் இயற்கையழகில் ஈடுபட்டுக் களித்து நின்று, பரவசப்பட்டுப் பேசுபவள் போல நடித்தாள்.

"அழகிய ஒளிமிக்க அணிகலன்களைத் தரித்துள்ள தோழியே! இந்தப் பழைய பெரிய கடலின் அழகினைப் பார். இக்கடலின்கண் பலவாய்ப் பெரியனவாகிய மரக் கலங்கள் உள்ளன. சங்குகள் ஈனுகின்ற முத்துக்களை யாம் பெறுமாறு, இக்கடலானது இச்சிறிய உப்பங்கழிகளில் வந்து பொருந்து கின்றது; தன்பால் கங்கையாற்றின் வெள்ளத்தை ஏற்றுத் தாங்கிக் கொண்டுள்ளது; அதுமட்டுமோ! பொலிந்த ஆர வாரத்தைக் கொண்ட மரக்கலங்கள் இயங்கும் திரைகளின் மிகுதி யையும் உடையதாய், இந்தக் கடலானது எத்துணை அழகியதாக இருக்கின்றது!" எனத் தோழியை நோக்கி, ஏதோ தனக்குக் காதல்பற்றி யாதொரு செய்தியும் தெரியாததுபோலவும், இயற் கையழகில் ஈடுபட்டுத் தன்னெஞ்சைப் பறிகொடுத்துப் பரவசமுற்று நிற்பதுபோலவும், தலைவி பேசுவதாக வைத்து, "அறியாள் போன்று குறியாள் கூறல்" என்னும் அகப்பொருள் துறை இலக்கணம் அமைய, மாணிக்கவாசகர் திருக்கோவையாரில் ஒரு செய்யுள் பாடுகின்றார்.

## தலைவியின் மறுமொழி :

தோழி தலைவனின் காதல் நிலையைப்பற்றிக் கூறியதற்குத் தலைவி, தனது பெருநாணம் காரணமாக, இங்ஙனம் ஏதோ இயைபின்றிப் பேசுபவள் போல நடித்தாலும், உள்ளுக்குள் தலைவன்பாற் காதலுணர்வு மிக்குடையவள் ஆதலின், தோழி கூறியவற்றிற்கு வெளிப்படையாக மறுமொழி அளிக்காமல், ஓர்ந்து கூட்டி நோக்கினால் மறுமொழியாக அமையும்படி கடலின்மேல் வைத்து விடை கூறுகின்றாள் தலைவி!

"பெறுவதற்கு அரிய சங்குகள் ஈனுகின்ற, விலையுயர்ந்த முத்துக்களை நாம் பெறுவதன் பொருட்டுப், பெரிய கடலானது, சிறிய கழிகளை எளிதாக வந்து பொருந்துவது போல, மிகப் பெருஞ் சிறப்புடையவன் ஆகிய தலைவன், தன்பால் அமைந்த காதல் நட்புணர்வு ஆகிய பேரின்பத்தை, யான் பெறுவதற்காக, இங்ஙனம் எளிவந்து தாழ்ந்து போந்து, நின்னை அடைந்து நின் உதவியை நாடுகின்றான். நீ இனி நினக்கு ஏற்புடையது செய்க" என்பது, தலைவி தோழிக்கு நேர்முகமாக அன்றி மறைமுகமாகக் கூறும் மறுமொழியாகும்.

**சீவன் முத்தர் :**

இந்தத் திருக்கோவையார் செய்யுள், ஏதோ தோழியும் தலைவியும் பற்றிய செய்திகளைக் கூறுவது போலக் காணப் பட்டாலும்,

> " பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர், பரமே
> பார்த்திருப்பர்; பதார்த்தங்கள் பாரார் "

எனச் சிவஞானசித்தியார், சீவன் முக்தர்களுக்குக் கூறும் இலக்கணத்திற்கு ஏற்ப, எல்லாப் பொருள்களையுமே சிவமய மாகக் காணும் இனிய பேறுபெற்ற மாணிக்கவாசகரின் இயல் பினைச் செவ்விதின் உணர்த்துகின்றது.

**கடலும் இறைவனும் :**

சாதாரணமாகக் கடலையும்கூட, மாணிக்கவாசகர் சிவ பெருமானுகக் காண்கின்ருர். கடலின் இயல்புகள் எல்லாம், சிவபெருமானின் இயல்புகளை அவருக்கு நினைவூட்டுகின்றன. ஆதலின் அவர் 'கடல் சிவபெருமானுக்கு ஒப்பாகும்' என்னும் கருத்து அமையப் " பல்மா வங்கம் மலி கலிநீர் (கடல்) தில்லை வானவன் நேர் வரும் " எனப் பாடுகின்ருர்.

(1) கடலானது வான்கழியை (உப்பங்கழியை) த்தானே வந்து செழுமிப்பொருந்துகின்றது; அதுபோலச் சிவபெருமான், வானம் ஆகிய பெருவெளியையும் கடந்து நிற்பவனுயினும், ஒரு மனித வடிவம் கொண்டு குருமூர்த்தியாக எழுந்தருள்கின்ருன்.

(2) கடலிற் கங்கையின் பெருவெள்ளம் வந்து கலக்கின்றது; அதுபோலச் சிவபெருமான் தன் சடைமுடியிற் கங்கையைத் தாங்கியிருக்கின்ருன்.

(3) கடலானது, ஆரவாரம் பொலியும் பாறுகள் (மரக் கலங்கள்) இயங்குகின்ற, திரைகளின் மிகுதியை (மலிதலை) உடையதாக இருக்கின்றது. அது போலச் சிவபெருமான் ஆரவாரம் மிக்க பாறுகள் (கழுகுகள்) ஆகிய பறவைகள் சூழ் கின்ற கபாலம் என்னும் தலையோட்டை ஏந்தியிருக்கின்ருன்.

(4) கடலானது, சங்குகள் ஈனுகின்ற முத்துக்களை நெய்தல் நில மக்கள் எளிதாகப் பெறும் வண்ணம் செய்கின்றன; அது போலச் சிவபெருமான் அடியார்களின் கூட்டுறவு ஆகிய சற்சங்கம் தரும் முத்தியை, யாம் அனைவரும் பெறும்வண்ணம் அருள் புரிகின்ருன்.

" சங்கம்தரும் முத்தி யாம்பெற ; வான்கழி தான் கெழீஇப்,
பொங்கும் புனற்கங்கை தாங்கிப், பொலிகலிப் பாறு, உலவு
துங்கம் மலிதலை ஏந்தலின் ஏந்திழை, தொல்லைப் பன்மா
வங்கம் மலிகலி நீர், தில்லை வானவன் நேர்வருமே "

## சொற்பொருட் குறிப்புக்கள் :

சங்கம் - சங்குகள், சற்சங்கம். " முத்து யாம்பெற - முத்தியாம் பெற " என இரு வகையாகவும் கொள்ளப்படும். முத்து - முத்துக்கள். முத்தி - மோட்சம், வீடுபேறு. வான்கழி - பெரிய உப்பங்கழி; வானத்தையும் கடந்து நிற்கின்ற. தான் - கடல், சிவபெருமான். கெழுமி - பொருந்தி, வடிவம் கொண்டுவந்து. பாறு - மரக்கலம், கழுகு. துங்கம்மலி - உயர்வுமிகுந்த. தலை ஏந்தலின் - அலையின் தலையில் ஏந்துவதனால்; கபாலம் ஆகிய தலை ஓட்டை ஏந்தியிருப்பதனால். வங்கம் - கப்பல். கலிநீர் - கடல். நேர்வரும் - ஒப்பாகும்.

## சங்கம் முத்திதரும் :

இத்திருக்கோவையார், கடலைச் சிவபெருமானுக்கு ஒப்பிடுவதுடன், தோழிக்குத் தலைவி தலைவனின்பால் தான் கொண்டுள்ள காதல்திறனை மறைமுகமாகக் கூறுதலை உணர்த்துகின்றது. அதுமட்டுமேயன்றி, எல்லாம் சிவமயமாகக் காணுகின்ற மாணிக்கவாசகரின் மாட்சிமையினையும் தெளிவுறப் புலப்படுத்துகின்றது. எல்லாவற்றுக்கும் மேலாக அடியார்களின் கூட்டுறவு ஆகிய சற்சங்கம், நமக்கு எளிதாக முத்திதரும் என்னும் அரிய இனிய செய்தியையும் அழகுற உணர்த்துகின்றது.

## முடிவுரை :

இவ்வாற்றால், இத்திருக்கோவையார் செய்யுளின்கண், சிறந்த பல சொற்பொருட்சுவை நலன்களும், அகப்பொருள் இலக்கணச் செய்திகளும், அருளனுபவ நுணுக்கங்களும் தத்துவ ஞானக் கருத்து நுட்பங்களும், பிறவும் ஒருங்கே செறிந்து அமைந்திருத்தல் காணலாம். மாணிக்கவாசகர் பாடிய மாணிக்கம் போன்ற மாட்சிமிக்க பாடல் அன்றோ ! இத்தகைய மாணிக்கம் போன்ற நானூறு பாடல்கள்கொண்ட திருக்கோவையார் என்னும் தெய்விக ஞானச் செழுமறை நூலை, நாம் அனைவரும் நன்கினிது ஓதியுணர்ந்து. நலம்பல பெற்று உய்ய முயலுவோமாக !



# "பரிமேலழகருக்கு ஒரு சொல்"

புலவர், திரு. இரா. செல்வக்கணபதி, எம். ஏ.,

## வகுப்பறையில் வந்த வம்பு :

புலவர் மாணவர்களுக்குத் திருக்குறள் வகுப்பு. அன்று உற்சாகமாக அறத்துப்பாலில், அழுக்காறுமை அதிகாரம் நடத்திக்கொண்டிருந்தேன். காரசாரமான வாதங்களை மாணவரிடையே ஏற்படுத்தித் தெளிவு காட்டுவதில் எனக்கு விருப்பம். அன்றைய வகுப்பில் வகுப்பறையைக் கவர்ந்த குறள்,

> " கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
> உண்பதூஉம் இன்றிக் கெடும் "

என்பதே. ஒருவன், ஒருவனுக்கு ஒன்றைக்கொடுக்க, இதனொடு தொடர்பில்லான் ஒருவன் கொடுக்கப்படும் பொருள்பற்றி உள்ளத்தில் பொறுமை கொள்கிறான். இதற்குத் தண்டனை என்ன ? வள்ளுவர் கூறும் விடை. இவ்வாறு பொறுமை கொண்டவன் சுற்றத்தார் உடுக்க உடையின்றியும், உண்ண உணவின்றியும் அழிவர். இதுவே குறள் கூறுவது.

## உரையால் வந்த உளைச்சல் :

மாணவர்களுக்கு எழுந்த ஐயம் நியாயமானது. பொறுமை செய்தவன் ஒருவன், தண்டனை பெறுவது அவன் சுற்றத்தார் - இது முறையாக இல்லை என்பது அவர்கள் வாதம். பரிமேலழகரைத் துணைக்கழைத்தோம். தமக்கே உரிய போக்கில் அவர் ஒரு சமாதானம் கண்டிருந்தார்.

> " சுற்றங்கெடுமெனவே, அவன்கேடு சொல்லாமலேயே
> பெறப்பட்டது "

என ஒருவரி எழுதிய அவர், தன் உரைக்குத் தாமே மீண்டும் ஒரு விளக்கம் காணுகின்றார்.

> " பிறர்பேறு பொறுமை தன்பேற்றையே யன்றித்தன்
> சுற்றத்தின் பேற்றையும் இழப்பிக்கும் என்பதாம் "

என்பது அவரது முழுமையான கருத்து. பரிமேலழகர் உரை சமாதானம் கூறுவதாகவே அமைகின்றது. இவ்வதிகாரமாகட்டும், அறத்துப்பாலின் வேறு அதிகாரமாகட்டும், அறம் பிழைத்தான் எவனோ, அவனே தண்டனைக்கு உரியவனாகிறான் என்றே வள்ளுவர் கூறுகின்றார். மாணவர்களுக்குப் பரிமேலழகர் உரையில் நிறைவு இல்லை. வகுப்பறைச் சோதனைகள் தீவிர சிந்தனைகளுக்கு வழிகோலுவன. இதனை ஆசிரியர்கள் அறிவர். எண்ணத்தை விரித்தேன்.

## நெஞ்சில் எழுந்த நினைவுகள் :

அற இலக்கிய ஆசிரியர்களுள் திருவள்ளுவர்க்கு முதன்மை இடம் உண்டு. தவறுகள் மனித இயற்கை. புறத்தில்நிகழும்பிழைகளைவிட அகத்தே நிகழும் அறப்பிழைகள் வலியன. தவறு செய்தவர்கள் எல்லாரும் கொலை செய்யப்பட வேண்டும் என்பது வள்ளுவர் கருத்தன்று. தவறுகள் திருத்திக்கொள்ளப்பெற வேண்டுமென்பதே அவர் நோக்கம். நோய்நாடி நோய்முதல் நாடவேண்டுமென்ற குறள்வரி நெஞ்சில் விரிந்தது. ஆழமான எண்ண அலைகள் என்னைச் சூழ்ந்தன.

## இரண்டாகப் பார்க்கும் எண்ணம் :

அழுக்காறு என்பது ஒரு சொல். பிறர் செல்வங்கண்டு பொறுத்துக்கொள்ள இயலாத மனநிலை அது. 'பொறாமை' என்று இன்று அச்சொற்பொருள் வேறு வடிவில் பயிலக் காணுகின்றோம். மனித மனத்தெழும் பொறாமைக்கு வள்ளுவர் நெஞ்சம் இரு காரணங்களைக் காணுகின்றன. அவர் நெஞ்சத்தினை இப்படிப் பகுத்துப் பார்க்கிறேன். தனக்குத்தானே உருவாக்கிக் கொள்ளும் அழுக்காறு ஒரு நிலை. பிறர் தூண்டுதலால் ஒருவன் மேற்கொள்ளும் அழுக்காறு ஒருநிலை. இவற்றிடையே உள்ள வேறுபாடு எளிதில் புரியக்கூடியதே. இதனை விரிக்கத் தேவையில்லை. தனக்குத்தானே உருவாக்கிக்கொள்ளும் அழுக்காற்றிற்கு உரிய தண்டனைகளை வள்ளுவர் பல குறட்பாக்களில் விரிக்கிறார்.

'ஒன்னார் வழுக்கியும் கேடீன்பது'

'செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும்'

'திருச்செற்றுத் தீயுழி உய்த்துவிடும்'

என்றெல்லாம் பலவாறு இத்தண்டனை வகைப்படுத்தப்பட்டுள்ளது. இனி நாம் காணவேண்டிய இன்றியமையாப் பகுதி பிறர் தூண்டுதலால் ஒருவன் மேற்கொள்ளும் அழுக்காறு பற்றியதே.

**அவளால் வந்த அது :**

அப்போது எனக்கு மணமாகவில்லை. ஒரு கோயிலுக்குப் போகிறேன். கோயிலில், கை நிறைய சர்க்கரைப் பொங்கல் வழங்கப்பெற்றது. உண்டு நிறைந்தேன். இன்னும் வேண்டுமா என வினவினர். வேண்டாம் மற்றவர்களுக்குக் கொடுங்கள் என்று மனதாரக் கூறினேன். என் நெஞ்சில் எனக்கு வழங்கப் பெற்றதுபோல மற்றவர்களுக்கு வழங்கப்பெற்றகாலை பொறாமை உணர்ச்சி சிறிதும் இருக்கவில்லை. என்னை நான் சரியாகத் தற்சோதனை செய்து பார்க்கிறேன். அன்று என்னிடம் அழுக் காற்றின் சாயலே இல்லை. சில ஆண்டுகள் உருண்டன. மணம் முடித்தேன். ஒரு நாள் இப்படித் திருக்கோயிலில் மீண்டும் கிடைத்த சர்க்கரைப் பொங்கலை உண்ட நிறைவில் வீடு சேர் கிறேன். துணைவியிடம் இதுபற்றிக் கூறுகின்றேன். அவளுக்கு எரிச்சல். நன்றாகத் தின்றுவிட்டு வந்து இங்கே விரிவுரை வேறா செய்கிறீர்கள் ? எல்லாம் சுயநலம்; எனக்கும் கொஞ்சம் வாங்கி வந்தால் என்னவாம் ? — இது மனைவியின் அங்கலாய்ப்பு.

**குழப்பத்தில் விளைந்த தெளிவு :**

இரண்டு நாட்களுக்குப்பின் அதே கோயில், அதே சர்க்கரைப் பொங்கல், இலையில் உட்கார்ந்து உண்டபடியே மனைவியை நினைக்கிறேன். அன்று அனைவருக்கும் அது பகிர்ந் தளிக்கப்பட்டபோது, மகிழ்ந்த மனம், இன்று, பாத்திரத்தில் அது குறையக் குறைய, புதிதாக வாங்க வருபவர்கள்மேல் கோபத்தைக்கொள்ளுகின்றது. வாய்திறந்து மனைவிக்கு ஒரு பங்கு தருக எனக் கேட்கவோ கூச்சம். ஆனால் உள் மனத்தில் கோயிலில் வழங்கப்பெற்ற சர்க்கரைப்பொங்கலை நான்பெற்று உண்டிருந்தும், அது என் மனைவிக்குக் கிடைக்கவில்லையே என்ற ஏக்கம், என்னைப்போல் பெறுபவன்மேல் அழுக்காற்றை உரு வாக்கிற்று. வள்ளுவர் இங்கே சற்று நிற்கிறார். இப்போது என் நெஞ்சில் தோன்றிய அழுக்காறு எதனால் உண்டாயிற்று? யார் இதற்குப் பின்னணி? சரியான விடை கிடைக்கிறது. எய்த வன் இருக்க அம்பினை நொந்து என்ன பயன்? தவறு செய்த வர்களைவிட, அதனைத் தூண்டியவர்களே தண்டனைக்குரியவர்கள் என்பது இன்றும் சட்டநெறி. என் நெஞ்சின் ஐயம் ஒய்கிறது. திருவள்ளுவர்காட்டும் நுட்பமான அறக்கோட்பாடு நெஞ்சில் ஒளி வீசுகின்றது.

**ஒருசொல் சேர்த்த உரம் :**

அழுக்காற்றை, அதனை எண்ணியும் பார்க்காத ஒருவன் நெஞ்சில், அவனைச் சார்ந்தவர்கள் விதைப்பார்களானால்

அவ்வாறு விதைத்தவர்களே வினையினை அறுக்க வேண்டுமென்கிறார் வள்ளுவர். சுற்றம் என்பது யாரை வேண்டுமானாலும் குறிக்கட்டும். அதுபற்றி ஆய்வு இல்லை. தூயன் ஒருவன் நெஞ்சில் நேரடியாகவோ, அன்றி மறைமுகமாகவோ அழுக்காற்றுக்கான விதையினைத் தூவுவோர் யாராக இருந்தாலும் அப்படித் தூவியவர்களே, அழுக்காறாகிய பாவத்திற்குரிய தண்டனையினை அடையவேண்டியவர்கள். இப்போது குறளை நினைவுக்குக் கொண்டு வருகின்றோம்.

"கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்"

சுற்றம் கெடும் என்ற வள்ளுவர் வாக்கின் நுட்பத்தினை மாணவர்கள் பகிர்ந்துகொள்கின்றனர். உண்பதும், உடுப்பதும் இன்றிக்கெடும் என்றது மாற்றிக்கூறிய நுட்பம் மேலும் சிந்தனையினைத் தூண்டுகின்றது. எவன் ஒருவன் பொறாமை என்னும் நஞ்சினைப் பிறன் ஒருவன் நெஞ்சில் விதைக்கின்றானோ அவன் முதலில் மானமழிந்து இகழப்பட்டு, உணவும் கிடைக்கப் பெறாது இறுதியில் மடிவான் என்பதனையே உடுப்பதும், உண்பதும் இன்றிக்கெடும் என்பதனால் வள்ளுவர் விளக்கியருளுகின்றார். எனவே, பொறாமையினை விதைத்து வளர்க்கும் சுற்றம் கெடவே, அவன் மனத்திருந்த அழுக்காறு கெட்டு அவன் தூயனாகிவிடுகின்றான். வள்ளுவர் கருத்துப்படி தவறு செய்தவனை அழிக்கவேண்டாம், அவனது தவறுகளை ஒழித்தால் போதும் என்ற கருத்து இங்கே வலிமை பெறுகிறது. 'சுற்றங் கெடுமெனவே அவன்கேடு சொல்லாமலேயே பெறப்பட்டது' என்ற பரிமேலழகர் உரையில், 'சுற்றங் கெடும் எனவே அவன் அழுக்காற்றின் கேடு' சொல்லாமலேயே பெறப்பட்டது என்று ஒரு சொல் சேர்த்து நிறைவு செய்துகொள்ள கருத்தோட்டம் நிறைகிறது. இக்குறளை, இவ்வதிகாரத்தின் ஆறாவது குறளாகக் கொள்கின்றார் பரிமேலழகர். ஒன்பது அல்லது பத்தாவது குறளாகக் கொண்டிருந்தால் உரைப்பொருள் சிறந்திருக்கும்.



# செய்திகள்

## ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின்
## ஜன்மநக்ஷத்திர விழா வழிபாடு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களது ஆண்டு ஜன்மநக்ஷத்திரத் திருநாள் வழிபாடு 27—4—77 புதன்கிழமையன்று தருமையாதீனம் திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி திருக்கோயிலில் சிறப்பாக நடைபெற்றது. காலையில் ஸ்ரீ அபிராமி அம்மை உடனுகிய ஸ்ரீ அமிர்தகடேசுவரப்பெருமானுக்கு மஹந்நியாசபூர்வக ஏகாதச ருத்ராபிஷேகமும், அர்ச்சனை ஆராதனைகளும், ஸ்ரீ காலசம்கார மூர்த்திக்கு சஹஸ்ரநாமார்ச்சனையும் சிறப்பாக நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கி ஆசியருளினார்கள்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் ஜன்ம நட்சத்திர விழா, பாடல்பெற்ற திருத்தலங்களில் மாதந்தோறும் நடைபெற்றுவருவதுபோல், இம்மாதம் 27—4—77 அன்று ஜன்ம நட்சத்திரத் திருநாள் வழிபாடு, திருந்துதேவன்குடியில் காலை 8 மணிமுதல் 10 மணிவரை ஸ்ரீ அருமருந்தம்மை உடனுகிய ஸ்ரீ கர்க்கடகேசுவரர் திருக்கோயிலில் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் நிகழ்த்தப்பெற்றது. காலை மணி 10-30 முதல் 12 வரை திருவியலூரில் ஸ்ரீ சாந்தநாயகியம்மை உடனுகிய ஸ்ரீ யோகாநந்தர் திருக்கோயிலில் அபிஷேக ஆராதனையுடன் வழிபாடு நிகழ்த்தப்பெற்றது. திருந்துதேவன்குடி-திருவியலூர்த் திருப்பதிகங்கள் என்ற நூல் வெளியிடப்பெற்று, அவ்வத்தலங்ளில் வழங்கப்பெற்றது. வழிபாட்டின்போது திருப்பதிகப் பாராயணம் நிகழ்த்தப்பெற்றது. பகல் 12 மணியளவில் தருமையாதீனத் தமிழ்ப் புலவர், வித்துவான், திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம்.ஏ., அவர்களும், புலவர், திரு. இரா. செல்வக்கணபதி எம்.ஏ., அவர்களும் சமய விரிவுரையாற்றினர். அங்கங்கும் அன்பர்கள் பலர் வழிபாட்டில் கலந்துகொண்டும் விரிவுரைகளைக் கேட்டும் பயன் பெற்றனர். ஆதீன அடியவர்களும், கல்லூரிப் பேராசிரியர், மாணவர்களும் உழவாரப்பணி, துப்புரவுப்பணிகள் செய்தனர். ஆலயங்களில் ஆலய நிர்வாகிகள் குழுவினரை வரவேற்று உடனிருந்து வழிபாடு, சமயப் பிரசாரம் முதலியவற்றைச் சிறப்பாக நடத்திவைத்தார்கள்.

### தருமையாதீனத்திலும் சிதம்பரத்திலும்

## ஸ்ரீ உமாபதிதேவ நாயனுர் குருபூஜை விழா

சந்தானுசாரியருள் நான்காமவராகிய ஸ்ரீ உமாபதி தேவ நாயனுர் குருபூஜைத் திருநாள் 1—5—77 ஞாயிற்றுக்கிழமை காலை 9-மணிக்குத் தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள சமயாசாரியர் சந்தானுசாரியர்களுக்கு அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பாக நடைபெற்றது. மாலை 7-மணி அளவில் தருமையாதீனத் தமிழ்ப்புலவர், வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ. அவர்கள் 'உமாபதி தேவர் வரலாறும் அருள் நூல்களும்' என்ற பொருள் பற்றி விரிவுரையாற்றினுர்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி, பக்தர்களுக்குப் பிரசாதம் வழங்கி ஆசியருளினுர்கள். தருமையாதீனச் சார்பில், சிதம்பரம் கொற்றவன்குடி ஸ்ரீ உமாபதிதேவ நாயனுர் திருமடத்தில் நாயனுருக்குப் பகலில் அபிஷேக ஆராதனைகளும், மாலை 6-மணி அளவில் தில்லைத் திருக்கோயிலில் ஸ்ரீ நடராசப்பெருமானுக்கு சகஸ்ரநாமார்ச்சனையும் நடைபெற்றன. மாலையில் சிதம்பரம் கனகசபை நகரில் உள்ள தருமையாதீனம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடத்தில் விரிவுரையும் நிகழ்த்தப்பெற்றது.

## சித்திரைத் திங்கட் பெருவிழா

**திருக்கடவூரில் :**

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருக்கடவூர் ஸ்ரீ அபிராமி அம்பாள் உடனுய ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் சித்திரைத் திங்கட் பெருவிழா சிறப்பாக நடைபெற்றது. 23—4—77 அன்று கொடியேற்றமும் 25—4—77 அன்று திருக்கல்யாணமும் 27—4—77 அன்று சகோபுர தரிசனமும் 28—4—77 அன்று காலசம்சாரமும் 30—4—77 அன்று திருத்தேர்த் திருவிழாவும் நிகழ்வுற்றன. நாள் தோறும் திருவீதியுலாவின்போது விசேஷ நாதசுர இன்னிசை நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. திருவிழா நாட்களில் சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. 26—4—77 செவ்வாய்க்கிழமையன்று தருமையாதீனத் தமிழ்ப் புலவர், திரு. வி. சபேசன் அவர்கள் 'குங்குலியக்கலையர்' என்ற தலைப்பில் விரிவுரையாற்றினுர்கள். 27—4—77 புதன்கிழமையன்று திருமுறை வகுப்பு ஆண்டு விழா நிகழ்ந்தது. தருமையாதீனத் தமிழ்ப் புலவர், மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்

'ஞானத் தமிழ்' என்ற தலைப்பில் உரையாற்றித் தேவார வகுப்பு மாணவர்கட்குப் பரிசுகள் வழங்கினார்கள். பண்ணிசை வாணர்களின் திருமுறைப் பாராயணத்தொடு, யானைமேல் திருமுறைகள் திருவீதியுலா நிகழ்வுற்றது.

28—4—77 வியாழனன்று காலசம்காரத் திருநாள். அன்று தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றினார்கள். காலசம்கார தரிசனத்திற்குப் பக்தர்கள் திரளாகக் கூடியிருந்தனர். காலசம்காரக் காட்சியின் போது தருமையாதீனத் தமிழ்ப் புலவர், டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., பிஎச்டி., அவர்கள் 'மார்க்கண்டேயர்' என்ற தலைப்பில் விரிவுரையாற்றினார்கள். வழிபாட்டிற்குப்பின்னர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கி ஆசியருளினார்கள். விழாக் காலங்களில் பக்தர்கள் வந்து வழிபட்டும், விரிவுரைகளைக் கேட்டும் பயன்பெற்றனர்.

சீகாழியில் :

திருக்கயிலாய பரம்பரைத் தருமை யாதீனத்திற்குச் சொந்தமான சீகாழி ஸ்ரீ சட்டைநாத சுவாமி தேவஸ்தானத்தில் சித்திரைத் திங்கட் பெருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. 23—4—77 அன்று கொடியேற்றமும் 24—4—77 அன்று திருமுலைப் பால் விழாவும் 27—4—77 அன்று சகோபுர தரிசனமும் 28—4—77 அன்று திருக்கல்யாணத் திருவிழாவும் 30—4—77 அன்று திருத் தேர்த் திருவிழாவும் 2—5—77 அன்று தீர்த்தத் திருவிழாவும் நிகழ்வுற்றன. விழா நாட்களில் சிறந்த நாதசுர இன்னிசை முதலியவற்றுடன் திருவீதி யுலாவும் பண்ணிசை வாணர்களின் திருமுறைப் பாராயணமும் நிகழ்ந்தன.

திருமுலைப்பால் விழாவன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றினார்கள். ஸ்ரீ திருஞான சம்பந்தர் சிவிகையில் எழுந்தருளியானதும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் பக்தர்களுக்கு ஆசியருளினார்கள். வித்துவான் ஸ்ரீமத். இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகளும் மற்றும் பல அறிஞர் பெருமக்களும் ஞானசம்பந்தர் அற்புத விளக்க விரிவுரை யாற்றினர். திருஞானசம்பந்தர் பிரமதீர்த்தக் கரைக்கு எழுந்தருளியானதும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், திருச்சி வானொலி நிலையத் தேவார இன்னிசைப் பயிற்சி ஆசிரியர் திரு. தி. சுப்பிரமணிய தேசிகர் எம். ஏ., அவர்களுக்கு, 'திருமுறை கலாநிதி'' என்னும் பட்டம் பொறிக்கப் பட்ட பொற்பதக்கமும் 1001 ரூபாய் கொண்ட பண முடிப்பும் வழங்கி ஆசிக் கவசமாகப் பொன்னாடை போர்த்தியருளினார்கள்.

தோணியப்பர் ஸ்ரீ உமாதேவியாரோடு பிரம தீர்த்தக் கரைக்கு எழுந்தருளி, திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு ஞானப் பால் வழங்கும் காட்சி நடைபெற்றது. ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் பொதுமக்களுக்கும் பக்தர்களுக்கும் திருமுலைப்பால் விழாப் பிரசாதம் வழங்கியருளினார்கள்.

திருமுலைப்பால் விழாவன்று மாலை திருச்சிராப்பள்ளி வானொலி நிலையச் சார்பில் திருமுறைப் பயிற்சி வகுப்பு நிறைவு விழா நடைபெற்றது. தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் விழாவைத் தொடங்கிவைத்து ஆசியருளினார்கள். திரு. கா. சங்கரனார் அவர்கள் 'பக்தி இசை' பற்றியும் திரு. க. வெள்ளைவாரணனார் 'சந்த இசை' பற்றியும் டாக்டர் திரு. முத்துச்சண்முகம் அவர்கள் 'சிந்து இசை' பற்றியும் ஆற்றிய உரைக் கோவை நிகழ்வுற்றது. விழாவையொட்டி, திருச்சி வானொலிநிலையத்தேவார இன்னிசைப் பயிற்சி ஆசிரியர் திரு. தி. சுப்பிரமணிய தேசிகர் எம். ஏ., அவர்களும், தேவார இன்னிசைப் பயிற்சியாளர்கள் திரு. எஸ். தண்டபாணி, திரு. நடராஜன் ஆகியோரும் நிகழ்த்திய தேவார இன்னிசை யரங்கு நிகழ்வுற்றது.

25—4—77 திங்களன்று திருஞானசம்பந்தர் அவதாரத்தால் பெரிதும் சிறந்தது சமய மறுமலர்ச்சியா? சமுதாய மறுமலர்ச்சி என்னும் பொருளில் பட்டிமண்டபம் நிகழ்வுற்றது. செந்தமிழ்ப் புலவர் திரு. இரா. இராஜசேகரன் B Sc. B, L. அவர்கள் நடுவராக அமர்ந்தார். சமய மறு மலர்ச்சியே என்னும் கட்சியில் திரு. அ. கலியபெருமாள் எம். ஏ, செல்வி கா. வள்ளிமயில், திரு. கா. ம. கண்ணப்பன் ஆகியோர் வாதிட்டனர். சமுதாய மறுமலர்ச்சியே என்னும் கட்சியில் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ. அவர்களும் திரு. மு. சிவச்சந்திரன் பி. ஏ. அவர்களும் வாதிட்டனர். நடுவர் 'திருஞான சம்பந்தர் அவதாரத்தால் பெரிதும் சிறந்தது சமய மறுமலர்ச்சியே' என்று தீர்ப்பு வழங்கினார்.

26—4—77 செவ்வாயன்று திருமுறை விழாவும் தேவார வகுப்பு ஆண்டு விழாவும் நிகழ்வுற்றது சிதம்பரம் திரு. S. திருநாவுக்கரசுப் பிள்ளை அவர்கள் தொடக்கவுரையாற்றித் தேவார வகுப்பு மாணவர்கட்குப் பரிசுகள்வழங்கினார்கள். தருமையாதீனத் தமிழ்ப் புலவர் திரு. க. வெள்ளைவாரணனார் அவர்கள் 'மூவர் தமிழ்' பற்றி உரையாற்றினார்கள். பண்ணிசை வாணர்களின் திருமுறைப் பாராயணத்தோடு; யானைமேல் திருமுறைகள் திருவீதி யுலாக் காட்சி நிகழ்வுற்றது. இரவு திருமுறை இசை யரங்கு நிகழ்வுற்றது.

27—4—77 புதனன்று "ஞானசம்பந்தப் பெருமானால் நான் பெற்றபேறு" என்னும் பொருளில் கவியரங்கம் நிகழ்வுற்றது. தருமையாதீனப்புலவர் டாக்டர் திரு. சொ. சிங்காரவேலன் எம் ஏ. அவர்கள் தலைமைக் கவிபடைக்க, வித்துவான் திரு. ம. வே. பசுபதி, வித்துவான் திரு. ஆ. இராமபத்திரன் எம். ஏ. புலவர் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ., வித்துவான் திரு. அ. கலியபெருமாள் எம். ஏ., திரு. கா. ம. கண்ணப்பன் ஆகியோர் சிவபாதவிருதயர், திருநீலகண்டர், மங்கையர்க்கரசியார், பூம்பாவை, அப்பர் என்ற தலைப்பில் இயற்றிய கவிதைகளை அரங்கேற்றினர்.

28—4—77 வியாழனன்று 'சமணர் கழுவேற்றத்தைத் திருஞான சம்பந்தர் தடுக்க முயலாதது குற்றம்' என்னும் பொருளில் வழக்காடு மன்றம் நிகழ்ந்தது. சிதம்பரம் திரு. ஜி. வாகீசம் பிள்ளை அவர்கள் தொடக்கவுரையாற்றினர். திரு. தி. வ. காந்திமதிநாதன் எம். ஏ., அவர்கள் நடுவராக இருந்தார். சமணர் கழுவேற்றத்தைத் திருஞான சம்பந்தர் தடுக்க முயலாதது குற்றம் என புலவர் திரு இரா, செல்வக்கணபதி எம். ஏ., அவர்கள் வாதிட, குற்றம் அன்று என புலவர் திரு. கோ. சாரங்கபாணி அவர்கள் எதிர் வழக்காடினர். விழா நாட்களில் அன்பர் பலர் வந்து இறைவனை வழிபட்டும் சொற்பொழிவுகளைக்கேட்டும் பயனுற்றனர்.

திருப்பணந்தாளில் :

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருப்பனந்தாள் ஸ்ரீ பெரியநாயகியம்மை உடனுறை ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் சித்திரைத் திங்கட் பெருவிழா சிறப்பாக நடைபெற்றது. 23—4—77 அன்று கொடியேற்றமும் 27—4—77 அன்று சகோபுர தரிசனமும் 29—4—77 அன்று திருக்கல்யாணமும், 1—5—77 அன்று திருத்தேர்த் திருவிழாவும் 2—5—77 அன்று தீர்த்தத் திருவிழாவும் நிகழ்வுற்றன.

26—4—77 செவ்வாயன்று வித்துவான் திரு. ம. சிவச்சந்திரன் பி ஏ, அவர்கள் 'ஞானத்தமிழ்' பற்றியும் 27—4—77 புதன்ன்று தருமையாதீனத் தமிழ்ப்புலவர், சிரோமணி திரு. வி. சபேசன் அவர்கள் 'அப்பர் அருந்தமிழ்' பற்றியும் 28—4—77 வியாழனன்று தருமை யாதீனத் தமிழ்ப்புலவர், திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ. அவர்கள் 'சுந்தரர் செந்தமிழ்' பற்றியும் சொற்பொழிவு ஆற்றினர். அன்பர் பலர் வந்திருந்து வழிபட்டும் சொற்பொழிவுகளைக் கேட்டும் பயன்பெற்றனர்.

**திருவையாற்றில் :**

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருவையாறு ஸ்ரீ அறம்வளர்த்த நாயகி உடனுறை ஸ்ரீ ஐயாறப்பர் திருக்கோயிலில் சித்திரைப் பெருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. 23—4—77 அன்று கொடியேற்றமும் 27—4—77 அன்று தன்னைத்தான் பூசித்தலும் 29—4—77 அன்று கோரதக் காட்சியும் 1—5—77 அன்று திருத்தேர் விழாவும் 2—5—77 அன்று தீர்த்தத் திருவிழாவும் 4—5—77 அன்று ஏழூர் வலம் வருதலும் நிகழ்வுற்றன.

27—4—77 அன்று மாலை வித்துவான் திரு. சுவர்ணகாளீஸ்வரன் அவர்கள் 'மங்கையர்க் கரசியார்' பற்றியும் 28—4—77 அன்று வித்துவான் திரு கா. ம. கண்ணப்பன் அவர்கள் 'காரைக்காலம்மையார்' பற்றியும் சொற்பொழிவாற்றினர். அன்பர் பலர் வந்து வழிபட்டும் சொற்பொழிவுகளைக் கேட்டும் பயனுற்றனர்.

## சென்னை, தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையம்.

**நாயன்மார்கள் குருபூஜை விழாக்கள் :**

சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில், காரைக்கால் அம்மையார், தொகையடியார், தில்லைவாழ் அந்தணர், சிறுத்தொண்டர், மங்கையர்க்கரசியார், விறன்மிண்டர் ஆகிய நாயன்மார் குருபூஜை விழா முறையே 5—4—77, 12—4—77, 13—4—77, 19—4—77, 22—4—77, 24—4—77 தேதிகளில் நிலைய பூஜை மடத்தில் நடைபெற்றது. திரு. V. N. ஆறுமுகம் அவர்கள் பெரிய புராணம் படித்து விளக்கம் செய்தார்கள். முதல் மூன்று தேதிகளில் (5, 12, 13—4—77) பிரசார நிலையம் வித்துவான். ஸ்ரீமத் மகாலிங்கத்தம்பிரான் சுவாமிகளும் உரையாற்றினார்கள். திருமுறை பயிலும் மாணவ,மாணவிகளும், அன்பர்களும் கேட்டுப் பயனடைந்தனர்.

**திருக்கோவையார் விரிவுரை :**

சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் 11—4—77, 18—4—77, 25—4—77 தேதிகளில் திருக்கோவையார் விளக்கவுரை திரு. N. R. முருகவேள் அவர்களால் நிகழ்த்தப் பெற்றது.

பிங்கள வருஷப்பிறப்பு விழா :

சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் 13-4-77 தேதியன்று மாலை தேவி உபாசகர் திரு. S. M. கௌரிசங்கர் அவர்கள் தலைமையில் விழா நடைபெற்றது. நிலைய ஓதுவாரும் திருமுறை பயிலும் மாணவர்களும் தோத்திரப் பாடல்கள் சிலவற்றைப் பாடிய பிறகு பிரசார நிலையம் வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் தொடக்கவுரை நிகழ்த்தி எல்லோரையும் வரவேற்றுப் பேசினார்கள். விழாத் தலைவர் திரு. கௌரிசங்கர் பேசுகையில் புது வருஷத்தில் கிரஹ அமைப்புக்கள் எப்படியிருக்கும் என்றும் முக்கியமாக சூரியன் வசிக்கும் ஸ்தானத்தையும் அதனால் ஏற்படக்கூடிய பலன்களையும் விளக்கிக் கூறினார்கள். அதைத் தொடர்ந்து திரு. குழந்தை சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்கள் சுருக்கமான முறையில் பஞ்சாங்க விளக்கம் செய்தார்கள். அதன் பிறகு சென்னை தேவி நிலையம் பொன்னம்மாள் சகோதரிகள் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி பாடல்கள் பலவற்றைப் பாடினார்கள். சமயப்பிரசார நிலைய சார்பில் அட்வகேட் திரு. N. பழனியப்பன் அவர்கள் பஜனை நிகழ்த்திய பொன்னம்மாள் சகோதரிகளைப் பாராட்டிப் பேசினார்கள். நன்றியுரையுடன் விழா நிறைவுற்றது.

கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா :

சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் 22—4—77ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை 7-00 மணிக்கு சித்தாந்தப் புலவர்மணி திரு. N. R. முருகவேள் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமி படத்திற்கு அர்ச்சனை செய்தபிறகு நிலைய ஓதுவார் திரு. S. ஞானப்பிரகாசமும் திரு. N. இராமமூர்த்தி அய்யரும் வேளூர்ப் பதிகங்களைப் பாடினார்கள். திரு. R. சிவஞானம் செட்டியார் அவர்கள் தலைவர் அவர்களையும் மற்றவர்களையும் வரவேற்றுப் பேசினார்கள். விழாத்தலைவர் பேசுகையில் " தீயவை புரிந்தாரேனும்......" என்று துவங்கும் கந்தபுராணப் பாடலை ஆதாரமாகக் கொண்டு ஸ்ரீ முருகன் எப்படி தீயவனையும் தூயவனாக மாற்றிக் கருணைகாட்டி ஆட்கொண்டுஅருள்செய்கிறார் என்பதனை விளக்கிக் கூறினார்கள். கலியுகக் கடவுளாகவிளங்கும் ஸ்ரீ முருகனை வழிபட்டால் அவனுடைய அருளை சுலபமாகப் பெறமுடியும் என்றும் சொன்னார்கள். திரு. R. சிவஞானம்செட்டியார் அவர்கள் எல்லோருக்கும் நன்றி தெரிவித்து முடிவுரை கூறியபின் விழா நிறைவுற்றது.

மாதாந்தர சமயப் பிரசார வழிபாடு :

சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தின் வழிபாடு 24—4—77ம் தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை 4-25 மணி முதல் இரவு 9-00 மணி வரையில் சென்னை பெரியமேட்டு ஸ்ரீ வரசித்தி விநாயகர் கோயிலில் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ விநாயகருக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் அர்ச்சனையும் கோயிலில் உள்ள சுவாமி, அம்பாள் ஸ்ரீ சுப்பிரமணியர் முதலிய எல்லா மூர்த்திகளுக்கும் அர்ச்சனையும் செய்யப்பட்டன. வழிபாட்டின்போது திரு. N. இராமமூர்த்தி அய்யர், குமாரி R. கௌரி குழுவினர் திருமுறைப்பாடல்கள், தோத்திரப் பாடல்கள் நாமாவளிப் பாடல்களைப் பாடினார்கள்.

வழிபாட்டிற்குப்பின் சமயப் பிரசாரக் கூட்டம் நடந்தது. திரு. R. சிவஞானம் செட்டியார் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள் வழிபாட்டில் கலந்துகொண்ட தவத்திரு A. வித்தியானந்தகிரி சுவாமிகள் பேசுகையில்; விநாயகர் வழிபாடு மிகவும் சிறந்தது. விநாயகர் உலகத்திற்கே மங்களத்தைக் கொடுக்கக் கூடியவர். அவரை வழிபட்டு அவருடைய நாமத்தை இடைவிடாது உச்சரித்து வந்தால் நாம் நன்மை பெறலாம் என்று கீதையில் சொல்லியிருக்கிறது. இந்த மாதிரி வழிபாட்டில் எல்லோரும் கலந்துகொண்டு கடவுளிடத்தில் பக்தி செலுத்தி துதிசெய்துவந்தால் அவருடைய அனுக்கிரஹத்தைப் பெறலாம். என்றும் சொன்னார்கள்.

பின்னர்ப்பேசிய திரு. E. தேவராஜன் அவர்கள் ஆண்டவன் நாமத்தை எப்பொழுதும் ஜெபித்துக் கொண்டேயிருக்க வேண்டும் என்று சொல்லி, “ சிவாயநம ” என்ற சொல்லில் அடங்கியுள்ள தத்துவத்தையும் எடுத்துரைத்தார்கள். ஆண்டவன் நம்மிடம் காட்டும் கருணைக்கு நன்றி செலுத்தும் வகையில் நாம் இயன்ற அளவு தருமம் செய்யவேண்டும். எல்லோரிடமும் இனிய வார்த்தைகள் பேசவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்கள்.

அடுத்துப்பேசிய திரு. வ. க. கிருஷ்ணன் மனிதன் மனிதனாக வாழவேண்டுமானால் தெய்வ பக்தியை விடாமல் செலுத்த வேண்டும். வாழ்வினையின் பயனாக அனுபவிக்க நேரிடும் இன்னல்களை நீக்கிக்கொள்ளவும், மீண்டும் பிறவி எடுக்காமல் இருப்பதற்கும் கடவுளை இடையறாது வழிபட்டு அவனுடைய அருளைப்பெற வேண்டும்.

குமாரி கௌரி பேசுகையில் விறன்மிண்ட நாயனார் திரு நக்ஷத்திர தினத்தையொட்டி அவருடைய வரலாற்றைச் சுருக்க மாகவும் தெளிவாகவும் எடுத்துரைத்தார். நமக்குக் கிடைக்கும் நேரத்தை வீணாக்காமல் ஆண்டவனை வழிபட்டு அவன் அருளைப் பெற வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

நிறைவில் திரு. R. சிவஞானம் செட்டியார் எல்லோருக்கும் நன்றி கூற, கூட்டம் நிறைவுபெற்றது



---

( 312 ஆம் பக்கத் தொடர்ச்சி )

## 11. கும்பம் – அவிட்டம் ½ – சதயம் – பூரட்டாதி ¾

( கு. கே. – கோ. ஸ. ஸி. ஸு. – ஸே. ஸோ. த. )

கும்ப ராசி 9 பாதங்களும் சுபபலனாக நடந்து வரும். தன சௌகரியம் குடும்பத்தினர் சௌக்கியம் திருப்திகரமாக இருந்து வரும். மனோவேக வார்த்தைகளால் குடும்பத்தினரிடையே அதிருப்திகள் ஏற்படினும் பின்வரும் நன்மைகளினால் மனமகிழ்ச்சி யடைதல் காணும். புத்திரருக்கு இராசாங்க பிரபலமும் சுபமும் தரும். 18உ க்குமேல் இல்லத்தில் சுப விசேஷங்கள் நடத்தல், குலதெய்வ பூசை போடுதல், பங்காளிகள் ஒன்று கூடுதல் ஆகிய குதூகலத்தை ஏற்படுத்தும். தாம்பத்திய வாழ்வு தெய்வபக்தி யுடன் நடந்துவரும். செய்தொழில் அல்லது உத்தியோகம் பெருமதிப்புடன் செயல்பட்டுவரும். வெள்ளி சனி சுபமாகும்.

## 12. மீனம் – பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி– ரேவதி.

( தி. து. ஸ. ச. த. – தே. தோ. ச.சி. )

மீன ராசி 9 பாதங்களும் சுபபலனாக நடந்துவரும். பணச் செலவாணி சரளமாக இருந்துவரும். குடும்பத்தில் நற் காரியங்கள் நடக்கும். ஆடை ஆபரண பிராப்தியும் உல்லாசமும் மகிழ்ச்சியும் தரும். பந்துமித்திரர்கள் வருகை தருவர். குல கௌரவம் மேலிட்டு இல்லற சம்பிரதாயங்கள் நடந்து கொண்டிருக்கும். புத்திரர் புத்திரிகளுக்கு சௌக்கிய பலன் தரும். தாம்பத்திய வாழ்வு மகிழ்ச்சியுடன் நடந்துவரும். செய் தொழில் பிரசித்தமாக நடந்துகொண்டிருக்கும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

# எதிர்காலம்

ஜோதிஷம். திரு. A. இராசமாணிக்கம்
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

( பிங்களஸூ வைகாசிமீ 1வ முதல் 32வ முடிய )

( 14—5—1977 முதல் 14—6—1977 முடிய )

ஸ்ரீ பிங்களஸூ வைகாசிமீ 1உ ஸ்திரவாரம் ரேவதி நக்ஷத்திரம் கௌலவகரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 21 நாழிகை 28 விநாடிக்கு கன்னியா லக்கினத்தில் ஸ்ரீ லோக ரட்சகரான சூரிய பகவான் லோக சுபிட்சார்த்தம் மேஷ ராசியிலிருந்து ரிஷப ராசி சங்கிரமணமாக வைகாசி மாதப் பிரவேசம் செய்கிறார். அதன் பலன் உலகத்தில் உற்பத்தி கேந்திரங்களில் இயந்திரங்கள், தொழில்களுக்கான கருவிகள், தேசபாதுகாப்புக் கருவிகள் முதலியவற்றின் உற்பத்தி அதிகரித்து உலக நாடுகளில் ஏற்படுகின்ற தேவைகளுக்கு ஏற்ப வந்துகொண்டிருக்கும். ஆன்றோர்களால் தொழிலாளர்களின் தொழிலபிவிருத்திக்கான ஊக்க முஸ்தீப்புகளும் பொருளுதவிகளும் ஏற்பட்டு நாட்டின் ஆக்கம் பெருகும். உலகெங்கும் உள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் விற்றிருக்கின்ற தவசீலர்களான குருமகான்கள் திருவாய் மலர்ந்தருள்கின்ற புனிதபொன் மொழிகள், நடத்துகின்ற சமய போதனைகள், ஆஸ்திக பிரசாரங்கள் அகிலமெங்கும் பரவும். தேவாலய உற்சவங்கள் தெய்வபூசனைகள் சிறப்பாக நடந்துவரும். ஈஸ்வர ஆக்ஞையால் தேசங்களில் ஜனப்பிரதிநிதிகள் ஜனாதிபதிகள் பிரஜா தீர்ப்பின்படி ஆளுகைக்கு வந்து அறம்காத்து பரிபாலனம் செய்வார்கள். நாடுகளில் பிரஜைகள் பொருள் வசதி வாழ்க்கை வசதிகளையடைந்து க்ஷேமகரமாக வாழ்வார்கள்.

## 1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼

( சு. சே. சோ. லா. – லி. லு. லே. லோ. – அ. )

மேஷ ராசி 9 பாதங்களும் சுமார் பலனாக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் மிதமிஞ்சிய செலவுகளாக இருப்பினும் பணச் செலவாணி பெருமதிப்பாக இருந்துவரும். 18 தேதிக்குமேல்

தெய்வானுக்கிரகத்தினல் மந்தமாக இருந்த எல்லா பிரச்சினை களும் பிரகாசத்துடன் அனுகூலத்துக்கு வரும். சகோதரருக்கு அரசாங்க செல்வாக்கை ஏற்படுத்தும். பூமி பாக்கியத்தை விருத்தி செய்யும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வியாஜ்ஜிய வழக்குகள் வெல்லும். செய் தொழி வில் நவீன முறை கடைபிடிக்கப்பெறும். சனி ஞாயிறு சுபமாகும்.

2. ரிஷபம் – கார்த்திகை ¾ – உரோகிணி – மிருகசீர்ஷம் ½

( இ. ஊ. ஏ. – ஓ. வ. வி. வூ. – வே. வோ. )

ரிஷப ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனை நடக்கும். குடும்பாவிருத்தியில் விசேஷ முன்னேற்றம் காணப்படாவிடினும் சிரமங்கள் அதிகரித்துக்காணுது. சகோதரம் பந்து அம்மான் களினுல் செலவு ஏற்படும். ஆயினும் மன திருப்தியளிக்காது. பூமி இயந்திர வகையில் முதலீடு ஆகும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வழக்கு விவகாரங்களில் சாதக பலனையே ஏற்படுத்தும். செய் தொழிலில் நற்கியாதி ஏற்படும். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

3. மிதுனம்–மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை–புனர்பூசம் ¾

( கா. கி. – கு. க. ங. ச்சா. – கே. கோ. ஹ. )

மிதுன ராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபிவிருத் தியில் திருப்திகரமான சூழ்நிலைகளும் சமயோசித வருமானங் களும் இருந்துவரும். சகோதரர்கள் சௌக்கியத்துடன் ஒற்றுமை மனப்பான்மையில் இருப்பார்கள். மாத பிற்பகுதியில் வீடு வாகனசௌகரியங்களில் பூமியில் நவீனத்தை ஏற்படுத்தும். வித்துவத்துவம் கலைத்துறையில் நன்மதிப்புத்தரும். சன்மானம் கிடைக்கும். தாம்பத்திய வாழ்வு சுமுகமாக நடந்துவரும். செய் தொழிலில் நலம்பல ஏற்படும். புதன் வியாழன் சுபமாகும்.

4. கடகம்– புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்

( ஹி. – ஹு. ஹே. ஹோ. ட. – டி. டு. டே. டோ. )

கடக ராசி 9 பாதங்களும் சுப பலன்தரும். குடும்பாபிவிருத் தியில் பண வசதியில் நல்ல முன்னேற்றம் காணும். சகோதர விசுவாசம் அதிகரிக்கும். பூர்வீக சொத்துக்களில் சுமுகமாக பாகப்பிரிவினைகள் செய்துகொள்ளல் காணும். 18உ க்குமேல் எதிர்பாராத தன பிராப்திகள் ஏற்படுதல் காணும், வித்தியா மேன்மையும் வியாபார லாபமும் திருப்தியளிக்கும். இராசாங்க பிரபலத்தை ஏற்படுத்தும். புத்திர சௌக்கியம் மேலிடும்,

தாம்பத்திய வாழ்வில் விருப்பு வெறுப்பு கலந்து காணும். செய் தொழிலில் அலுவல்கள் சுறுசுறுப்பாக நடந்துவரும். வெள்ளி சனி சுபமாகும்.

5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் ¼
(ம. மி. மு. மெ. – மோ. ட. டி. டு. – டே.)

சிம்ம ராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். தன வசதி தாராளமாக இருந்துவரும். குடும்பத்தில் நிம்மதியான சூழ்நிலை உருவாகும். சகோதரர்களுக்கு சௌக்கிய பலன்தரும். 18வ க்குமேல் கடித ஒப்பந்த லேவாதேவிகளில் தாமதப்பட்டிருந்தவை கைகூடி வரும். தாரம் புத்திரர் பௌத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். செய் தொழிலில் கண்ய நிலைமையும் மேலிடங்களில் அனுசரணை அனுகூலங்களையும் தரும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

6. கன்னி – உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½
(டோ. ப. பி. – பு. ஷ. ண. ட. – பே. போ.)

கன்னியா ராசி 9 பாதங்களும் சுமாரான பலனைத் தரும். குடும்பாபிவிருத்தியில் போதிய பண வசதிகள் இருந்துவரும். சகோதரர் தொழில்துறை சிறந்து விளங்கும். வித்துவத்துவம் கலைத்துறையில் மாதப் பிற்பகுதியில் பிரசித்தமான நிலைமையை ஏற்படுத்தும். பூமி இயந்திரங்களில் முதலில் அற்பபலனைகதோற்றி பின் அபிவிருத்திக்குரிய நிலைமையை உருவாக்கும். புத்திரரின் தொழில் முன்னேற்றமாக விளங்கும். தாம்பத்திய வாழ்வில் சாதாரணமாக உள்ள பூசல்கள் 14வ க்குமேல் தீரும். செய் தொழிலில் மதிப்பும் சௌகரியமும் ஏற்படும். செவ்வாய் புதன் சுபமாகும்.

7. துலாம் – சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾
(ர. ரி. – ரு. ரே. ரோ. தா. – தி. து. தே.)

துலா ராசி 9 பாதங்களும் சுமாரான பலனைத்தரும். குடும்பத்தில் அவசிய தேவைகளுக்கு அவ்வப்போது பணம் வந்துகொண்டிருக்கும். சகோதரர் சௌக்கியம் பெற்றோர் சௌக்கியம் மேலிட்டு சந்தோஷம் தரும். பொதுநலனுக்காக அதிக அலைச்சலாக இருப்பினும் பின்னர் மதிப்பும் கௌரவமும் உண்டாகும். புத்திர சௌக்கியம் நன்ருகவும் தாம்பத்திய வாழ்வு சுமுகமாகவும் இருந்துவரும். செய் தொழில் நன்ருகச் செயல்பட்டுவரும். வியாழன் வெள்ளி சுபமாகும்.

8. விருச்சிகம் - விசாகம் ¼ - அனுஷம் - கேட்டை.

( தோ. - ந. நி. நு. நெ. - நோ. ய. யி. யு. )

விருச்சிக ராசி 9 பாதங்களும் நற்பலன் தரும். பணவசதி கண்யத்துடனேயே சரளமாக செலவாணியில் இருந்துவரும். சகோதரருக்கு மாத பிற்பகுதியில் விவாகப் பிராப்தியையளிக்கும். பந்துமித்திரர்களின் வருகை உபசரணை நடக்கும். அடிக்கடி பிரபலஸ்தர்களின்சந்திப்பு ஏற்படும். தெய்வதரிசனங்கள் கிடைக்கும். பூமியில் - இயந்திரங்களில் - ஒப்பந்தங்களில் பணம் வரவாகிக்கொண்டிருக்கும். தாம்பத்தியவாழ்வில் அன்யோன்யம்நிலவும். செய்தொழில் பிரபலமாக நடந்துவரும். சனி ஞாயிறு சுபமாகும்.

9. தனுசு - மூலம் - பூராடம் - உத்திராடம் ¼

( யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே. )

தனுர் ராசி 9 பாதங்களும் சுமார் பலனாக நடக்கும் பணச் செலாவணி சாதாரணமாக இருந்துவரும். சகோதரர்கள் சௌக்கியமாகவும் ஒற்றுமையுடனும் இருந்துவருவார்கள். தாய்க்கு இரத்தக்கட்டி போன்ற நலிவு வந்து குணமாகும். வித்துவத்துவம் கலைத்துறையில் பெருமளவிற்கு ஆதாயம் காணாது. மாத பிற்பகுதி இஷ்டசித்தியைத் தரும். தார புத்திரர் களுக்கு சௌக்கிய பலன் ஏற்படும். செய் தொழிலில் காரிய சாதனைகளை உண்டுபண்ணும். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

10. மகரம் - உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½

( போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி. )

மகர ராசி 9 பாதங்களும் சுமாரான பலனைத் தரும். குடும்பத்தில் ஓரளவு பண வசதி ஏற்பட்டு சௌகரியம் தரும். சகோதரர்களால் நேர்ந்த சொல்ப மனஸ்தாபங்கள் தீர்ந்து சுமுகத்துக்கு வரும். பூமி இயந்திரங்களில் விருத்தி பலன் ஏற்படும். இருப்பிடத்தில் மாறுதல் ஏற்படும். புத்திரர் புத்திரிகளின் சௌகரியம் நன்றாக இருந்துவரும். மனைவிக்கு பித்தாதிக்கமாக இருந்து குணமாகும். மாதுரு பிதுரு இவர்களின் மனஸ்தாபம் தர்மசங்கட நிலைமையாக இருந்து தீரும். ஞாயிற்றுக்கிழமையில் சூரியார்ச்சனை செய்ய நலமாகும். செய் தொழில் அல்லது உத்தியோகத்தில் ஆதாய பிராப்தியாகும். புதன் வியாழன் சுபமாகும்.

( தொடர்ச்சி 308 ஆம் பக்கம் பார்க்க )